# தர்மசக்கரம்












பிங்கல ஸ்ரீ கார்த்திகை மீ சக்கரம் 26 ஆரம் 11

ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்

திருப்பராய்த்துறை - 639 115 திருச்சி ஜில்லா

# அந்தர்யோக விவரங்கள்

சேலத்தில் 20—11—77 ஞாயிற்றுக்கிழமை

இடம்: ஸ்ரீ ஸாரதா கல்லூரியின் பிரார்த்தனைக் கொட்டகை
நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: **ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்**
உணவு வசதி: நேரில் ரூ. 1-00 செலுத்தி சீட்டுப் பெற்றுக்கொள்ளலாம்.

கோவை ஜில்லா—குமரன்குன்று ஆலயத்தில் 20—11—77 ஞாயிற்றுக்கிழமை

இடம்: அருள்மிகு ஸ்ரீ கல்யாண சுப்பிரமணிய சுவாமி ஆலயம்
நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: **ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்**

மதுரை ஜில்லா—திருமங்கலத்தில் 20—11—77 ஞாயிற்றுக்கிழமை

இடம்: ஸ்ரீ ராமகிருஷ்ண-விவேகானந்த தபோவனம்
நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: **ஸ்ரீமத் சுவாமி அசலானந்தர்**

திருநெல்வேலி ஜில்லா—அம்பாசமுத்திரத்தில் 20—11—77 ஞாயிற்றுக்கிழமை

இடம்: ஊராட்சி ஒன்றிய நடுநிலைப்பள்ளி
நேரம்: காலை 9-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: **ஸ்ரீமத் சுவாமி பரானந்தர்**

கோவை ஜில்லா—வையம்பாளையத்தில் 20—11—77 ஞாயிற்றுக்கிழமை

இடம்: சுதந்திர உயர்நிலைப்பள்ளி
நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: **ஸ்ரீமத் சுவாமி ஆத்மானந்தர்**

சேலம் ஜில்லா—மேச்சேரியில் 27—11—77 ஞாயிற்றுக்கிழமை

இடம்: மேச்சேரி ஸ்ரீ பசுபதீசுவரர் ஆலயம்
நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: **ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்**

தூத்துக்குடியில் 27—11—77 ஞாயிற்றுக்கிழமை

இடம்: காரப்பேட்டை நாடார் எலிமெண்டரி பாடசாலை
நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: **ஸ்ரீமத் சுவாமி பரானந்தர்**

கோவை—சித்திரச்சாவடியில் 4—12—77 ஞாயிற்றுக்கிழமை

இடம்: ஸ்ரீ ராமகிருஷ்ண விவேகானந்த ஆச்ரமம்
நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: **ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்**
உணவு வசதி: நேரில் பகல் உணவிற்கு ரூ. 1-00ம் மாலை சிற்றுண்டிக்கு 75 பைசாவும் செலுத்தி சீட்டுப் பெற்றுக்கொள்ளலாம்.

[ பொருளடக்கத்திற்குப் பின்பக்கம் பார்க்க ]

# தர்ம சக்கரம்

மாத சஞ்சிகை

| சக்கரம் 26 | பிங்கள ஆண்டு கார்த்திகை மீ | ஆரம் 11 |
|---|---|---|


## பொருளடக்கம்



## சந்தா விவரம்

### 1. ஆண்டு சந்தா ரூ. 10

ரூ. 10 செலுத்தியது முதல் அல்லது அடுத்த மாதம் முதல் பன்னிரண்டு மாதங்களுக்கு ஒவ்வொரு தமிழ் மாதமும் முதல் தேதியில் கிடைக்கும்படி பத்திரிகை அனுப்பப்படுகிறது.

### 2. சகாய சந்தா ரூ. 5

தர்ம சக்கரம் அடக்க விலைக்கு வெளியிடப்படுகிறது. ஆண்டு சந்தா ரூபாய் பத்து செலுத்த இயலாதவர்கள் ரூபாய் ஐந்து மட்டும் அனுப்பலாம். பாக்கி ரூபாய் ஐந்தைப் பாண்டிச்சேரி S. விஸ்வநாதன் 'தர்ம சக்கர உதவி நிதி' யினின்று ஈடுசெய்து கொள்கிறோம். தெய்வீக விஷயமாதலால் ரூபாய் பத்து செலுத்த இயலுகிறவர்கள் இந்தச் சலுகையைப் பயன்படுத்த வேண்டாம்.

### 3. டிபாஸிட் சந்தா ரூ. 100

ரூ. 100 அனுப்பி இங்கு டிபாஸிட் செய்து விட்டால் டிபாஸிட் இங்கு இருக்கும் வரையில் மாதந்தோறும் தர்மசக்கர பத்திரிகை தங்களுக்கு வந்துகொண்டிருக்கும். ஆண்டுதோறும் சந்தா செலுத்தி புதுப்பிக்க வேண்டியதில்லை. பத்திரிகை வேண்டாம் என்று கருதும் பொழுது டிபாஸிட் செய்த ரூபாய் நூறையும் திரும்பப் பெற்றுக்கொள்ளலாம். இந்தத் திட்டம் உள்நாட்டுக்கு மட்டும் உரியது.

**உள்நாடு தனி இதழ் ரூ. 1-00 வெளிநாடு வருட சந்தா ரூ. 20-00**

## அந்தர்யோக விவரங்கள் (தொடர்ச்சி)

**தென் ஆற்காடு ஜில்லா—அவலூர்பேட்டையில் 4—12—77 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்:* *அரசினர் உயர்நிலைப்பள்ளி*
*நேரம்:* *காலை 10-00 மணிமுதல் மாலை 4-45 மணிவரை*
நடத்துபவர்: **ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்**

**திருநெல்வேலியில் 4—12—77 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்:* *மதுரை திரவியம் தாயுமானவர் ஹிந்து கல்லூரி உயர்நிலைப்பள்ளி*
*நேரம்:* *காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*
நடத்துபவர்: **ஸ்ரீமத் சுவாமி பரானந்தர்**

**ராமநாதபுரம் ஜில்லா—சாத்தூரில் 11—12—77 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்:* *எட்வர்டு ஆண்கள் உயர்நிலைப்பள்ளி* (பஸ் ஸ்டாண்டிற்கு எதிரில்)
*நேரம்:* *காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*
நடத்துபவர்: **ஸ்ரீமத் சுவாமி ஆத்மானந்தர்**

**மதுரை ஜில்லா—உசிலம்பட்டியில் 11—12—77 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்:* *நாடார் ஸரஸ்வதி உயர்நிலைப்பள்ளி*
*நேரம்:* *காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*
நடத்துபவர்: **ஸ்ரீமத் சுவாமி அசலானந்தர்**
*உணவு வசதி:* நேரில் பகல் உணவிற்கு ரூ. 1-25 செலுத்தி சீட்டுப் பெற்றுக் கொள்ளலாம்.

**திருநெல்வேலி ஜில்லா—சேரன்மஹாதேவியில் 18—12—77 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்:* *பாரத்வாஜ ஆச்ரமம்*
*நேரம்:* *காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*
நடத்துபவர்: **ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்**
*உணவு வசதி:* நேரில் பகல் உணவிற்கு ரூ. 1-50ம், மாலை சிற்றுண்டிக்கு 75 பைசாவும் செலுத்தி சீட்டுப் பெற்றுக்கொள்ளலாம்.

**சென்னையில் 18—12—77 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்:* *புரசவாக்கம் ஸர். M.CT. முத்தையாசெட்டியார் மாணவர் உயர்நிலைப்பள்ளி*
*நேரம்:* *காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*
நடத்துபவர்: **ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்**

---

அந்தர்யோக நடைமுறையில் நாமஜபம், தியானம், உபந்யாசம், மௌனம், ஸத்ஸம்பாஷணை முதலியவை அடங்கும். உபந்யாசங்கள் யோகம், பக்தி, ஞானம் முதலியவைகளைப்பற்றி நடைபெறும். ஸத்ஸம்பாஷணையில் அன்பர்கள் தங்கள் சந்தேகங்களை நீக்கிக்கொள்ளலாம். விருப்பமுள்ள அன்பர்களும் தாய்மார்களும் அந்தர் யோகங்களில் கலந்துகொள்ளலாம். ஆனால் கைக்குழந்தைகளுடன் வரும் தாய்மார்களும் பன்னிரண்டு வயதிற்குக் கீழ்ப்பட்ட சிறுவர்களும் கலந்துகொள்ள அனுமதிக்கப்படமாட்டார்கள்.







प्रज्ञानं ब्रह्म

# தர்ம சக்கரம்

அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க்(கு) அல்லால்
பிறவாழி நீந்தல் அரிது.

| சக்கரம் 26 | பிங்கள ஹு கார்த்திகை மீ | ஆரம் 11 |
|---|---|---|

## பிரார்த்தனை

स्थावरं जङ्गमं व्याप्तं येन कृत्स्नं चराचरम् ।
तत्पदं दर्शितं येन तस्मै श्रीगुरवे नमः ॥

ஸ்தாவரம் ஜங்கமம் வ்யாப்தம் யேன க்ருத்ஸ்னம் சராசரம் ।
தத்பதம் தர்சிதம் யேன தஸ்மை ஸ்ரீ குரவே நம: ॥

ஸ்தாவரம், ஜங்கமம், சரம், அசரம் ஆகியவைகளில் ஊடுருவி இருக்கும் பரமனை அனுபூதியில் காட்டி அருள்பவர் குரு. ஆதலால் குருவுக்கு வணக்கம்.

மைகாட்டு மாயை மயக்கமற நீ குருவாய்க்
கைகாட்ட வும்கனவு கண்டேன் பராபரமே.

— தாயுமானவர்

# அருள் விருந்து

தூய அன்பில் தெய்விகம் திகழுகிறது.

அறிவுக்கு ஆதாரமாயிருப்பது சத்தியம்.

கடவுளை மறப்பதற்கு நிகரான வறுமை பக்தனுக்கு இல்லை.

பரத்தில் நிலைத்திரு. வீண்பேச்சில் வாழ்வைப் பாழ்படுத்தாதே.

அனைத்துக்கும் அடிப்படையாயுள்ள மூலப்பொருளைக் காண்பது அறிவு.

நிறைவது பிரகிருதியின் கூறு; அமைதியுற்றிருப்பது ஆத்மாவின் கூறு.

தீமையைத் தவிர்ப்பது மட்டும் போதாது; அதை எதிர்ப்பது அவசியம்.

பெரிய இலட்சியத்துக்காக வாழ்வை ஒப்படைக்கிறவர்கள் பாக்கிய வான்கள்.

கொல்லன் இரும்பைக் காய்ச்சி நிமிர்த்துவதுபோன்று ஆத்ம சாதகன் மனதை நேர்மைப்படுத்துகிறான்.

கல்போன்று அமைதியுற்றிருப்பது அமைதியாகாது. நேர்மையினின்று வடிவெடுக்கின்ற அமைதியே உண்மையான அமைதியாகும்.

அடங்காமை வாழ்க்கைத் திட்டமாகாது. அடங்காமை மனிதனை ஆழ்த்துகிறது. அடக்கமோ அவனை எடுக்கிறது. அதுவே வாழ்க்கைத் திட்டம்.

உடலுக்கு அடிமையாயிருப்பவன் பதைப்பதைப்புக்கும் சினத்திற்கும் ஆளாகிறான். சொரூபத்தில் நிலைத்திருப்பவனிடத்துச் சாந்தி ஓங்குகிறது.

தெய்விகம் படைத்திருப்பதாகப் பாசாங்கு பண்ணுபவனுக்கு இன்னல்கள் பெரிதும் அடிபட்டுப் போகின்றனவென்றால் உண்மையாகவே தெய்விகம் படைத்திருப்பவனைத் தாக்க வல்லது யாது?

மனிதனோடு மனிதன் சமரசப்படுத்திக்கொள்வது நன்று. ஆனால் அதை முன்னிட்டு அடிப்படைக் கோட்பாடுகளைப் புறக்கணிப்பதற்கு நிகரான கேடு இல்லை. தத்துவத்திலிருந்து பிசகுபவன் பெருவாழ்வுக்கு உதவமாட்டான்.

வசதியையும் சுக ஜீவனத்தையும் நாடுபவன் பெருவாழ்வுக்கு உதவமாட்டான். பரநாட்டம் பூண்பவனே எத்தகைய கஷ்ட நஷ்டத்தை முன்னிட்டும் நெறியினின்று பின்வாங்கான்.

## பரமஹம்சர் புகட்டிய

# பெருநெறி விளக்கம்

1884ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 19ஆம் தேதியன்று ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ச தேவர் சிந்தி என்னும் இடத்தில் அமைந்திருந்த பிரம்ம சமாஜத்தை மீண்டும் ஒருமுறை பார்வையிட்டார். அந்தச் சமாஜத்தினுடைய மழை பருவத்தின் விழா அப்பொழுது நடைபெற்றுக்கொண்டிருந்தது. பெனி மாதவபால் என்பவருடைய பங்களாவில் அந்த விழாவைக் கொண்டாட ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. புஷ்பங்களைக் கொண்டும் பச்சிலைகளைக் கொண்டும், கொடிகளைக் கொண்டும், விதவிதமான வர்ணங்களோடு கூடிய காகிதங்களைக் கொண்டும் அந்த மண்டபம் நன்கு அலங்கரிக்கப்பட்டிருந்தது. வீட்டுக்குள்ளேயிருந்த அழகிய காட்சிக்கு ஒப்ப வீட்டிற்குப் புறத்திலும் நீலநிறமான வெட்ட வெளியிலே ஆங்காங்கு மிதக்கிக்கொண்டிருந்த வெண் மேகங்களானவை தடாகத்தினுள்ளே நன்கு பிரதிபிம்பிக்கப்படுவன ஆயின.

பிற்பகல் 4-30 மணிக்கு ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ச தேவர் அங்கு வந்து சேருவாராயினர். மண்டபத்தினுள் பிரவேசித்து வழிபாட்டுக்குரிய பீடத்தை நோக்கி அவர் தலை வணங்கினர். அவரைச் சுற்றிலும் பிரம்ம சமாஜத்து அங்கத்தினர்கள் அமர்ந்திருந்தனர். அவர்களுக்கிடையில் விஜயரும், திரைலோக்கியரும் குறிப்பிடுவதற்குரிய பிரம்ம சமாஜத்தவர்கள் ஆயினர்.

தம்முடைய கம்பீரமான இனிய குரலிலே திரைலோக்கியர் பாடல்கள் சில பாடி அன்பர்களுக்கிடையில் ஆனந்த பரவசத்தை ஊட்டிக்கொண்டிருந்தார்.

பரமஹம்சதேவர்: (திரைலோக்கியரிடம்) "ஓ தாயே, உன்னுடைய பக்தியில் நான் பித்துப் பிடித்தவன் ஆவேனாக' என்னும் உம்முடைய பாடலை நான் மிகமிக ரசிக்கிறேன். அதைத் தாம் ஒருதடவை பாடுவீரா?''

திரைலோக்கியர் பாடுவாராயினர்: 'உன்னுடைய பக்தியிலே ஓ தாயே, என்னை நீ பித்துப் பிடித்தவன் ஆக்குவாயாக. ஞானத்துக்கோ தத்துவ விசாரத்துக்கோ அவசியம் எனக்கு யாது உளது? உன்னுடைய அன்பு என்னும் மதுவை நான் வேண்டியவாறு பருகுவேனாக. ஓ தாயே, பக்தர்களுடைய உள்ளங்களை நீ கவர்ந்து கொள்ளை கொண்டு போகக் கூடியவள். தாயே, உன்னுடைய பேரன்பு என்னும் கடலினுள் என்னை ஆழ்ந்து அமிழ்த்திப் பிடித்துக்கொள்வாயாக. இவ்வுலகமோ உனக்குரிய பைத்தியக்கார வீடு ஆகிறது. இதனுள் சிலர் சிரிக்கின்றனர், சிலர் அழுகின்றனர், சிலர் ஆனந்தக் கூத்தாடுகின்றனர். இங்கே ஏசுநாதர், புத்தர், மோசஸ், கௌராங்கர் ஆகிய பெருமக்கள் உன்மீது வைத்துள்ள பக்தி என்னும் மதுபானத்தை வேண்டியவாறு பருகிவிட்டுப் போதை நிறைந்தவர்களாகப் புலப்படுகின்றனர். தாயே, இத்திருக் கூட்டத்தினுள் நீ என்னை எப்பொழுது இணைத்து வைத்து இன்புற்றிருக்கச் செய்வாய்?'

இப்பாடலுக்குச் செவிசாய்த்துக்கொண்டிருந்த பரமஹம்ச தேவருடைய மனதின்கண் மாறுதல் ஒன்று உண்டாயிற்று. படிப்படியாக அவர் சமாதியில் ஆழ்ந்து மூழ்கினர். அந்நிலையிலே அவர் சிறிதுநேரம் சொக்கியிருந்தார். பிறகு அவருடைய மனது சிறிது சிறிதாகப் புறவுலக ஞாபகத்துக்கு வந்தது. அப்பொழுது பக்தர்களுக்கு அவர் பக்தியைப் பற்றிய அரிய பெரிய கருத்துக்கள் சிலவற்றை எடுத்துரைப்பாராயினர். அப்படிப் பேசுதற்கிடையில் அவருடைய மனது பாரமார்த்திகப் பேருணர்விலேயே மூழ்கியிருந்தது. குடிவெறியிலிருப்பவன் ஒருவன் எங்ஙனம் பேசுவானோ அங்ஙனமே அவரும் பேசுவாராயினர். அதன் பிறகு படிப்படியாக அவருடைய மனது இவ்வுலக ஞாபகத்துக்குத் திரும்பி வந்தது.

பரமஹம்ச தேவர்: ''ஓ தாயே, பரபோதம் என்னும் போதை எனக்கு வேண்டாம். நான் ஒரு சிறிதளவு சித்தியை அருந்துவேன். (இப்பொழுது பக்தர்களைப் பார்த்துக்கொண்டு) 'சித்தி' என்பதன் உட்பொருளை நீங்கள் அறிந்துகொள்வீர்களாக. யோக சாஸ்திரத்

தில் அஷ்ட சித்திகளைப் பற்றிப் பகரப்பெற்றிருக்கிறது. அவைகளை நான் இங்கே குறிக்கவில்லை. பரம்பொருளைச் சென்றடைதல் என்பதையே நான் சித்தி என்று சொல்லுகிறேன். இந்த அஷ்ட சித்திகளைப்பற்றி ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா அர்ஜுனனுக்கு எச்சரிக்கை ஒன்று செய்திருக்கிறார். 'ஓ நண்பா, ஏதேனும் ஓர் ஆத்ம சாதகன் அஷ்டசித்திகளில் ஏதேனும் ஒன்றை ஒரு சிறிதளவாவது அடையப் பெற்றிருப்பானாகில் அதன் விளைவாக அவன் ஒருபொழுதும் பரமனைப்பற்றிய அனுபூதியை அடையமாட்டான் என்பதை நீ உறுதியாக அறிந்து கொள்வாயாக'. சித்திகளைத் தொடர்ந்து தற்பெருமை தானாக வடிவெடுக்கிறது. தற்பெருமை ஒரு சிறிதளவாவது ஒரு மனிதனுடைய உள்ளத்தில் இடம்பெறுமாகில் அவன் ஒருபொழுதும் அனுபூதிக்கு அருகதை உடையவன் ஆகமாட்டான்.

"பக்தர்கள் நான்கு வகைப்பட்டவர்கள் ஆகிறார்கள் என்று சில சம்பிரதாயக்காரர்கள் கூறுகிறார்கள். அவர்கள் முறையே பிரவர்த்தகர்கள், சாதகர்கள், சித்தர்கள், பரமசித்தர்கள் எனப்படுகின்றனர். சமய அனுஷ்டானங்களைப் புதியவைகளாகத் துவக்கியிருக்கிறவர்கள் பிரவர்த்தகர்கள் எனப்படுகின்றனர். அன்னவர்கள் நெற்றியிலும் மேனியிலும் திருநீறு, திருமண் போன்ற சமயச் சின்னங்களை அணிந்து கொள்கின்றனர். கழுத்தில் ருத்திராக்ஷ மாலையோ, துளசிமணி மாலையோ அணிந்திருக்கின்றனர். அனுஷ்டானங்களைக் கண்ணுங்கருத்துமாக அவர்கள் கையாண்டு வருகின்றனர். சாதகர்கள் எனப்படுகிறவர்கள் இன்னும் கொஞ்சம் மேல் நிலைக்கு வந்தவர்கள் ஆகின்றனர். புறச் சின்னங்களை அணிந்து கொள்வதில் அவர்களுக்கு ஆர்வம் குறைந்திருக்கிறது. ஈசுவர அனுபூதியில் அவர்கள் கருத்து மிகச் செலுத்துகின்றனர். அதன் பொருட்டு அவர்கள் உள்ளன்போடு பிரார்த்தனைகள் பண்ணுகின்றனர். ஜபம், தபம் முதலியவைகளை அவர்கள் முறையாகக் கையாளுகின்றனர். அருள்நாட்டம் பூண்டவர்களாக அவர்கள் இறைவனைக் கூவி அழைக்கின்றனர். அடுத்தபடியாக எத்தகைய பாங்குடையவர்களை நாம் சித்தர்கள் என அழைப்பது? கடவுள் இருக்கிறார் என்னும் ஆஸ்திக நம்பிக்கை சித்தர்களிடம் தீவிரமாக அமைந்திருக்கிறது. செயல்கள் அனைத்தும் கடவுளிடத்திருந்தே வடிவெடுக்கின்றன என்னும் உறுதிப்பாடு அவர்களுக்கு உண்டு. அன்னவர்களுக்குக் கடவுள் தர்சனம் வாய்த்திருக்கிறது. கடைசியாகப் பரம சித்தர்கள் என்பவர் யார்? பரம சித்தர்கள் கடவுள் காட்சியை அடையப் பெற்றவர்கள் மட்டும் அல்லர். கடவுளோடு அன்னவர்கள் நெருங்கி உறவாடுகின்றனர். கடவுளோடு அவர்கள் தந்தை என்ற இணக்கத்தை, தங்களுக்கு மைந்தன் என்ற இணக்கத்தை, தங்களுடைய காதலுக்குரிய நாயகன் என்ற இணக்கத்தைத் தீவிரமாக அமைத்துக் கொள்கின்றனர்.

"விறகுக் கட்டையில் தீ மறைந்திருக்கிறது என்று தீவிரமாக நம்புவது ஒரு விஷயம். அந்த விறகுக் கட்டையினின்று தீயை மூட்டி அத்தீயின் உதவியால் உணவு சமைப்பது, உணவைப் புசித்துப் பசியைப் போக்குவது, பசியைத் துடைத்துத் திருப்தியடைந்திருப்பது ஆகியவை முற்றிலும் மற்றொரு விஷயம் ஆகிறது. இந்த இரண்டு விஷயங்களும் முற்றிலும் ஒன்றோடொன்று ஒவ்வா.

"ஆத்ம ஞான அனுபவம் இத்தகையது என்று அதற்கு எல்லை கட்ட யாருக்குமே இயலாது. ஏதேனும் ஒருவித அனுபவத்தை ஒரு சாதகன் அடையப் பெற்றிருக்கலாம். அதற்கு அப்பாற்பட்ட மற்றொரு வித அனுபவத்தை இன்னொருவன் பெற்றிருக்கலாம். மீண்டும் ஒருவனுக்கு இன்னொருவித அனுபவம் அமைந்திருக்கலாம். இப்படி விதவிதமான அனுபவங்கள் விதவிதமான சாதகர்களிடத்து அமைந்திருப்பது இயல்பு.

(ஒருவிதப் பரவசநிலையில் இருந்து கொண்டு ஆங்குக் கூடியிருந்த பிரம்ம சமாஜத்து அங்கத்தினர்களைக் குறிப்பிட்டுப் பரமஹம்சதேவர் இங்ஙனம் பகர்வாராயினர்.) "இக்கூட்டத்தாரை ஒருவித பிரம்ம ஞானிகள் எனப் பகரலாம். பரவஸ்துவுக்கு வடிவம் இல்லை என்று இக்கூட்டத்தார் நம்புகின்றனர். ஒருவிதத்தில் இவர்களுடைய போக்கு ஆமோதிப்புக்கு உரியதாகிறது.

(இப்பொழுது பிரம்ம சமாஜத்து அன்பர்

களிடம் அவர் இங்ஙனம் பகர்கின்றார் :) "உங்கள் லக்ஷியத்தை நீங்கள் உறுதியாகப் பிடித்துக் கொள்ளுங்கள். கடவுள் வடிவத்தோடு இருப்பதும் உண்மை; வடிவமற்றிருப்பதும் உண்மை. மற்று உங்களுக்கு அவர் வடிவமற்றவர் என்னும் கோட்பாடுதான் மேலானதென்று தோன்றுமாகில் அதை உறுதியாகப் பிடித்துக் கொள்ளுங்கள். ஒரு கொள்கையை உறுதியாகப் பிடித்துக் கொள்கிறவர்களுக்கே பரம்பொருளின் அனுபூதி வாய்க்கிறது. கொள்கையில் உறுதிப்பாடு இல்லாவிட்டால் அனுபூதி வாய்க்கமாட்டாது. உங்களுக்குப் புறம்பாக மற்றொருவித ஆஸ்திகர்கள் இருக்கிறார்கள். கடவுள் வடிவத்தோடு கூடியவர் என்னும் நம்பிக்கை அன்னவர்களிடம் ஆழ்ந்து அமைந்திருக்கிறது. அத்தகைய நம்பிக்கை வைத்திருக்கிறவர்கள் அதற்கு ஒப்ப ஈசுவர அனுபூதியை அடையப்பெறுகின்றனர். அதற்கு மாறாகப் பரமனுக்கு வடிவம் யாதும் இல்லையென்று உறுதியாகப் பிடிக்கிறவர்கள் தங்களுடைய கோட்பாட்டிற்கு ஏற்ற அனுபூதியைப் பெறுகின்றனர். பக்ஷணம் ஒன்றை ஒரு மனிதன் எப்படிப் பிடித்துக் கடித்துப் புசித்தாலும் சரி, அதன் சுவையை அவன் அனுபவிக்கிறான். அப்பக்ஷணத்தின் மேற்பக்கத்தைக் கடிக்கலாம், அடிப்பக்கத்தைக் கடிக்கலாம், வலப் பக்கத்தையோ இடப் பக்கத்தையோ கடிக்கலாம், எப்பக்கத்தைக் கடித்துப் புசித்தாலும் அதன் சுவை அவனுக்குச் சொந்தமாகிறது. (இதைக் கேட்டு எல்லாரும் நகைக்கின்றனர்.)

"சாதகன் ஒருவனுக்குத் தீவிர நம்பிக்கை இருக்க வேண்டும். முழு மனதோடு அவன் வழிபடு தெய்வத்திடத்துப் பிரார்த்தனை பண்ண வேண்டும். உலகப் பற்றுடையவர்களும் கடவுளிடத்து ஒரு போக்கில் நம்பிக்கை வைக்கின்றனர். அன்னவர்களின் கடவுள் எத்தகையவர் என்பது உங்களுக்குத் தெரியுமா? சிறுவர்கள் விளையாடிக் கொண்டிருக்கும்பொழுது 'கடவுள் சாக்ஷியாக நான் இயம்புகிறேன்' என்று தங்களுக்குள் இயம்பிக் கொள்கின்றனர். அவர்களுடைய உற்றார் உறவினர்களாகிய பெண்பாலர்கள் ஒருத்தியோ மற்றொருத்தியோ சண்டை போடும்பொழுது இந்தப் போக்கில் அவர்கள் பேசுகின்றனர். அப்படிப் பேசுவதைக் கேட்ட சிறுவர்களும் அதேவிதத்தில் கடவுள்மீது சத்தியம் பண்ணிப் பேசுகின்றனர். உலகப்பற்றுடையவர்கள் வைத்திருக்கிற கடவுள் நம்பிக்கையைப் படாடோபமுடைய மேற்பகட்டுக்காரன் ஒருவன் வைத்திருக்கிற கடவுள் நம்பிக்கையோடு ஒப்பிடலாம். படாடோபக்காரன் ஆடம்பரமாக உடை அணிந்திருக்கிறான். தாம்பூலம் மெல்லுவதின் விளைவாக அவனுடைய உதடுகள் செக்கச் செவேலென்று தென்படுகின்றன. கையில் பிரம்பு ஒன்றை எடுத்துக்கொண்டு உல்லாசமாக அவன் பூந்தோட்டத்துக்குள் நடக்கிறான். புஷ்பம்ஒன்றை அன்னவன் பறித்தெடுக்கிறான். அதை அவன் தன் நண்பனுக்குக் காட்டி 'ஆஹா! எவ்வளவு அழகான புஷ்பத்தைக் கடவுள் சிருஷ்டித்திருக்கிறார்!' என்று அவன் இயம்புகிறான். ஆனால் அவன் அப்படிச் சொல்லுவதில் பொருள் ஒன்றுமில்லை. தாற்காலிகமாக அத்தகைய சொல் அவன் நாவில் வடிவெடுக்கிறது. சிவக்க சூடு ஏறியிருக்கிற இரும்புச் சட்டி ஒன்றன்மீது ஒரு சொட்டு ஜலம் விழுந்தால் அது அக்கணமே சுவறிப் போகிறது. உலகத்தவன் ஒருவன் வைத்திருக்கிற தெய்வ நம்பிக்கை அத்தகையது.

"ஒரு லக்ஷியத்தை நீங்கள் உறுதியாகப்பிடித்துக் கொள்ள வேண்டும். தெய்வீக உணர்வை உள்ளத்தினுள் ஆழ்ந்து உருவெடுக்கச் செய்ய வேண்டும். அவ்வுணர்விலேயே ஆழ்ந்து மூழ்கியிருக்க வேண்டும். அப்பொழுதுதான் தெய்வீக உணர்ச்சி உள்ளத்தினுள் உறுதியாக உருவெடுக்கும். கடலின் அடிமட்டத்திலிருக்கும் விலையுயர்ந்த மணிகளையோ ரத்தினங்களையோ கைப்பற்றுதற்கு அக்கடலினுள் ஆழ்ந்து மூழ்க வேண்டும். கடலின் மேற் பரப்பில் மட்டும் மிதக்கிக் கொண்டிருக்கும் ஒருவன் அந்த ரத்தினங்களைப் பெறமாட்டான். அதே விதத்தில் அருள் நாட்டத்தில் ஆழ்ந்து மூழ்கியிருக்கிறவர்களே இறைவனுடைய அருளுக்குப் பாத்திரமாகிறார்கள்."

இத்தகைய அரிய பெரிய விஷயங்களைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்த பரமஹம்சதேவர் பிறகு இனிமையான குரலிலே பாடல் ஒன்று பாடலானார்.

---

# பராபரக் கண்ணி

(தாயுமானவர் இயற்றியது)

332. மண்ணான மாயையெல்லாம்
மாண்டுவெளியாக இரு
கண்ணாரவும் கனவு
கண்டேன் பராபரமே.

மாயை அல்லது மாயா தத்துவத்துக்கு விளக்கங்கள் பல இருக்கின்றன. மாயப் பிரபஞ்சம் என்பது ஒரு விளக்கம். மனது என்னும் ஒரு மாயை என்பது மற்றொரு விளக்கம். கால, தேச, நிமித்தம் எனவும் அது அழைக்கப்படுகிறது. பொருள் ஒன்று தன்னுடைய நிஜ சொருபத்தை மறைத்துக்கொண்டு மற்றொரு பொருளாகக் காட்சி கொடுக்குமானால் அக் காட்சியை மாயை என்கின்றோம். சூரிய கிரணம் வெட்ட வெளியிலுள்ள மேகத்தின் வாயிலாகப் பாயும்பொழுது அது ஏழு நிறங்களாகச் சிதறடைகிறது. அந்த நிறங்களை வானவில் என்றும் இந்திர தனுசு என்றும் இயம்புகிறோம். கால தேச நிமித்தம் என்னும் முப்பட்டைக் கண்ணாடியின் வாயிலாக நாம் காண்கிற காட்சி பிரபஞ்சமாக நமக்குத் தென்படுகிறது. இக்காட்சியை மாயை என்கிறோம். ஞானவிசாரத்தின் வாயிலாகவோ, பக்திப் பிரவாகத்தின் வாயிலாகவோ நம்முடைய மனதை ஒடுக்கினால் பிரபஞ்சத்தின் காட்சி மெய்ப்பொருள் காட்சியாகத் திருந்தி அமைகிறது. சித் சொருபம் அல்லது பிரக்ஞை அல்லது வாலறிவு மெய்ப்பொருளின் நிஜநிலையாகிறது. மனது என்னும் கண்ணாடியைக் கொண்டு அதை நுகருமிடத்து அது பஞ்சபூதங்களாகத் திரிவுபடுகிறது. பஞ்ச பூதங்களில் ஒன்று மண். அதை ஜடம் என்கின்றோம். சேதனமற்றது ஜடம் என இயம்பப்படுகிறது. சேதனம் அழியும் பாங்குடையதா? அது அழியுமானால் அது மெய்ப்பொருளாகாது. வெளிச்சம் அழியும் பாங்குடையதா? அது அழியுமானால் வெளிச்சமாகாது. நண்பகலில் வெளிச்சமிருக்கிறது. அமாவாசை இருளில் கார் இருள் இருக்கிறது. வெளிச்சம் சூனியமாகப் போனால் அது கார் இருள். ஆனால் கார் இருளில் வெளிச்சம் இல்லையா? ஆந்தையின் கண்கொண்டு பார்த்தால் கார் இருள் வெளிச்சமாகக் காட்சி கொடுக்கிறது. அப்படியானால் வெளிச்சம் என்பதும், இருள் என்பதும் கண் அமைப்புக்கு ஒத்த காட்சிகளாம். சேதனம் ஜடம் என்பனவும் காண்பவனுடைய பாங்கை ஒத்திருக்கின்றன. காண்பவன் ஞானக் கண்ணைப் பெறுவானாகில் அவனுக்கு ஜடமயமாயுள்ள பஞ்சபூதங்கள் சேதனமாக மிளிர்கின்றன. ஞானக்கண் ஆனது ஊனக் கண்ணையும் சில வேளைகளில் பயன்படுத்த வல்லது. ஞானக் கண் கொண்டு பார்க்கிறவனுக்கு அசேதனம் அல்லது ஜடம் வெறும் கற்பனையாம்.

நிர்விகல்ப சமாதி அடையப்பெற்றான பிறகு சுவாமி விவேகானந்தருக்கு ஜடப் பொருள்களெல்லாம் சேதனப் பொருள்களாகக் காட்சி கொடுத்தன. காண்போனுடைய பரிபாகம் மேல்நிலைக்குப் போகப் போகக் காணப்படு பொருள்களிடத்தில் இருக்கும் அசேதனம் அல்லது ஜடநிலை மறைந்துபட்டுப் போகிறது. சேதனம் ஒன்றுதான் யாண்டும் இருந்தபடி இருக்கிறது. இந்த ஞானக் காட்சிக்கு விளக்கமாக இக்கண்ணி வந்து அமைந்திருக்கிறது.

333. மண்ணீர்மையாலே
மயங்காதுன் கையால் என்
கண்ணீர் துடைக்கவும் நான்
கண்டேன் பராபரமே.

மண் நீர்மை என்பது மண்ணின் தன்மை அல்லது ஜடநிலை.

கண்ணீர்-மயக்கம் அல்லது அக்ஞானநிலை.

அக்ஞானம் என்பது திரிவுபட்ட ஞானக் காட்சி. ஒருபொருள் மற்றொரு பொருளாகக் காட்சிகொடுக்குமானால்அது அக்ஞானம் எனப்படுகிறது. மனதின் நீர்மை அல்லது இயல்பு அதற்குக் காரணமாகிறது. கயிற்றைப் பாம்பாகக் காண்பது ஒருவனுடைய மன இயல்பு. கயிற்றைக் கொடியாகக் காண்பது இன்னொருவனுடைய மன இயல்பு.

மன இயல்புக்கு ஏற்ப ஒரு மெய்ப்பொருள் பலப்பல தோற்றப்பொருள்களாகக் காட்சி கொடுக்கிறது. அதனால் தான் ‘எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள் மெய்ப்

பொருள் காண்பதறிவு' என்னும் பொய்யா மொழி அமைந்துள்ளது. பரம்பொருள் ஒன்றே மெய்ப்பொருள். அது பிரபஞ்சத்திலுள்ள பலப் பல பாங்குகளை உடைய பலப்பல பொருள் களாகக் குறை ஞான நிலையிலிருப்பவர்களுக் குத் தென்படுகின்றன. குறை ஞான நிலையே அஞ்ஞானம் எனவும், மயக்கம் எனவும் இயம் பப் பெறுகிறது. உண்மையில் எல்லாரும் ஞானக்கண் படைத்திருக்கின்றனர். அதற்கு இடைஞ்சலாயிருப்பது மனதோடு கூடிய ஊனக்கண். பண்பட்டுள்ள எந்த ஆத்மசாத கன் ஒருவன் மனதை ஒதுக்கி வைக்கிறானோ அவன் அப்பொழுதே ஞானக்கண் வாய்க்கப் பெற்றவனாகிறான். மனதை ஒதுக்கித் தள்ளிய ஞானகுருவின் சந்நிதியும் இதற்குப் பயன்படு கிறது. பரமஹம்சதேவரின் அருளால் விவே கானந்த சுவாமிகள் நிர்விகல்ப சமாதி அடை யப்பெற்றது இதற்குச் சான்று ஆகிறது. மனதை ஒதுக்கித் தள்ளுதல் என்னும் அரிய செயல் கவிதை ரசத்தோடு கூடி 'என் கண் ணீர் துடைக்கவும் நான் கண்டேன்' என்று இயம்பப்பெறுகிறது. குருமூர்த்தியினுடைய சந்நிதியிலோ அல்லது தீவிர பக்குவத்தின் விளைவாகவோ யார் ஒருவன் மனதை ஒதுக் கித்தள்ளுகிறானோ அவன் அப்பொழுதே தனக்கு யதார்த்தமாயுள்ள சேதன சொரூப மாக இலங்குகிறான். பிறகு அகம் புறம் என்று எண்ணுதபடி யாண்டும் இலங்குவது சேதனம் அல்லது சித்சொருபம். ஜடப்பொருள் என்று கற்பனை செய்யப்பட்டதும் உண்மையில் சேத னமே. அதுவே மெய்க்காட்சி. அதினின்று கீழி றங்கி வந்து மனதின் துணைகொண்டு பிரபஞ்ச மாகக் காண்பது வெறும் மயக்கமாம். இந்த ஞானக் கோட்பாடு இக்கண்ணியில் அடங்கி யிருக்கிறது.

ஞானக்கண் என்பது ஆத்ம சொருபமே ஒழிய வேறு ஒன்றும் அன்று. ஆத்ம சாதகர் களிடத்து அது இயற்கையாகவே அமைந்துள் ளது. மனது என்னும் திரை அதை மறைத் துக்கொண்டிருக்கிறது. மனது எவ்வளவுக் கெவ்வளவு உலக விஷயங்களில் உழன்று கொண்டிருக்கிறதோ அவ்வளவுக்கவ்வளவு சொருப ஞானம் பின்னணிக்குப் போகிறது. மனது அல்லது அந்தக்கரணம் சாதனத்தின் வாயிலாகச் சுத்தியடைவதற்கேற்ப சொருப ஞானம் தெளிவடைகிறது. பல தடவைகளில் ஆத்மசாதகனுடைய பரிபக்குவமும் ஞான குருவினுடைய அருள் சாந்நித்தியமும் ஒன்று கூடி மனது என்னும் மாயையை ஒதுக்கித் தள்ளுகின்றன. அப்பொழுது சமாதி அல்லது சொருப ஞானம் தானாகத் திகழுகிறது. பரம ஹம்சதேவரின் சந்நிதியில் விவேகானந்த சுவாமிகளுக்கு இங்ஙனம் நிர்விகல்ப சமாதி கூடியது. மூலன் மரபில் வந்த மௌனகுருவின் சந்நிதியில் தாயுமான சுவாமிகளுக்கும் இதே பாரமார்த்திகப் பெருநிலை வாய்ப்பதாயிற்று. ஞானக்கண்ணைக் குருதேவர் நல்கியருளினர் என்று சிஷ்யன் குருவைப் போற்றுவது என்றென்றும் ஐதிகமாக வந்துள்ள மரபு ஆகும்.

மானுடன் ஒருவனிடத்து உலகப்பற்று எவ் வளவுக்கெவ்வளவு உள்ளத்தினுள் ஊறிக் கிடக்கிறதோ அவ்வளவுக்கவ்வளவு அவன் மாபெரும் பாவி என்று மொழியப் பெறுகிறான். நித்திய அநித்திய வஸ்து விவேகம் தெளிவா கச் சாதகன் உள்ளத்தில் உருவெடுக்க வேண் டும். அப்பொழுது அநித்தியமாயுள்ள உலகப் பொருள்களும்உலகவாழ்வும் அவனுடைய உள் ளத்தினின்று ஒதுங்கிப் போவது சாத்தியமா கிறது. இந்திரியங்கள்மூலமாகவருகிற இன்பத் தினிடத்துப் பற்றுவைக்கிறவர்களுக்கே இம் மைப்பற்றும் மறுமைப்பற்றும் உருவெடுக்கின் றன. சுகபோகங்களெல்லாம்மனிதனுடைய நிஜ சொருபத்தைப் பாழ்படுத்தி அவனைக்கீழ்மை யில் ஆழ்த்துகின்றன என்னும் தெளிவு உருவெ டுக்கிறபொழுது அது வைராக்கியம் எனப்படு கிறது. தெளிந்த விவேகமும், தீவிர வைராக் கியமும் வாய்க்கப் பெற்றவனே நல்ல ஆத்ம சாதகன்ஆகிறான். மற்றவன் ஜடபுத்தி உடைய வனாகிறான். அன்னவனுக்கு ஆத்மபோதம் வாய்க்காது பிறவிப் பெருங்கடலிலேயே அவன் மூழ்கிக்கொண்டு இருப்பான். ஆயினும் அதற்கு ஒருமுடிவு உண்டு. விரைவில் அல் லது நாளடைவில் மக்களாகப் பிறந்துள்ள எல்லார்க்கும் விவேகமும், வைராக்யமும் உருவெடுக்கின்றன. அப்பொழுது பரத்தைய டைய சாதகன் தகுதியுடையவனாகிறான் என் பது இக்கண்ணியினுடைய கருத்து.

# பரபோதம்

(ஸ்ரீ ராமகிருஷ்ணரின் அருட்செல்வரான சுவாமி பிரம்மானந்தரின் போதனை)

ஆத்ம சாதனை செய்கின்ற நீ மனக் குழப்பம் அடைய வேண்டிய அவசியமில்லை. தியானம் செய்து பழகுவது அத்தியாவசியமானது. பக்தியோடு ஜபம் செய்வதும் நல்ல பலனைக் கொடுக்கும். ஜபம், தியானம் செய்வதை நாள் தோறும் இடைவிடாது அப்பியாசம் செய்து வரவேண்டும். ஜபம், தியானம் உன் மனதுக்குச் சாந்தியை அளிக்கும். முறையாகச் செய்யும் ஜபம், தியானத்தின் மூலம் உடலும் ஆரோக்கியம் அடையும். தியானத்தின் ஆரம்ப நிலையில் மனதோடு போராட வேண்டியிருக்கும். மனம் மான் போன்று அலையும் தன்மையுடையது. அலைகின்ற மனதை அடக்கி இறைவன் திருவடியில் அதை ஒருமுகப்படுத்த வேண்டும். ஆனால் ஆரம்பத்தில் அது சாத்தியமாகாது. மனப்போராட்டத்தையும் அளவோடு செய்ய வேண்டும். அளவுக்கு மீறி மனதோடு போராடினால் மூளைக்கு அதிகம் வேலை உண்டாகும். மனதைச் சிறிது சிறிதாக வசத்திற்குக் கொண்டுவர முயல். அப்பியாசத்தின் மூலமாகவும், வைராக்கியத்தின் மூலமாகவும் மனதைஒருமுகப்படுத்தி விட்டால் தியானம் உனக்குச் சுலபமாக அமையும். மணிக்கணக்காக நீ தியானம் செய்யலாம். அதனால் உன் மனதுக்கோ உடலுக்கோ எந்த விதமான சிரமமும் இருக்காது.

அயர்ந்த உறக்கத்தில் உடலும் உள்ளமும் ஓய்வு பெறுகின்றன. அயர்ந்த உறக்கத்துக்குப் பின் புதிதாக வேலை செய்வதற்கு உடலும் உள்ளமும் புது வலிவு பெறுகின்றன. உறக்கத்தை விட தியானத்தில் உடலுக்கும் உள்ளத்துக்கும் நல்ல ஓய்வு கிடைக்கின்றது. உடலும் உள்ளமும் தியானத்துக்குப்பின் புதிய உற்சாகம் பெறுகின்றன. உள்ளம் பேரானந்தம் அடைகிறது.

மனதுக்கும், சரீரத்துக்கும் நெருங்கிய உறவு இருக்கிறது. சரீரம் பாதிக்கப்படும் பொழுது மனதும் பாதிக்கப்படுகிறது. ஆகையால் சரீரத்தையும் பாதுகாப்பது அவசியமாகிறது. சரீரத்தை நோய் இல்லாமல் வைத்துக்கொள்வதற்கு நல்ல உணவில் கருத்துச் செலுத்துவது அவசியம். உணவை வயிறு நிறைய உண்பது ஆத்ம சாதகனுக்குப் பொருந்தாது. அரை வயிற்றுக்கு மேல் வயிற்றை உணவால் நிரப்பக் கூடாது. அரை வயிற்றுக்கு மேல் சாப்பிட்டால் தியானம் நன்கு அமையாது. அதிகம் உண்கின்றபொழுது மனதில் சலனம் உண்டாகிறது. மனதைக் காமம், கோபம், ஆசை முதலானவை அலைக்கழிக்கின்றன. அவற்றை மனதினின்று அகற்றாத முன்பு மனதை உன் கைவசம் கொண்டு வர முடியாது. மனம் அலைந்துகொண்டிருக்கும் பொழுது நீ எப்படித் தியானம் பண்ண முடியும்?

தவம் செய்தல் அல்லது கட்டுப்பாடான வாழ்க்கை வாழ்தல் மிகவும் அவசியம். சிலர் உடலை வருத்துவது தவம் என்று எண்ணுகின்றனர். ஒற்றைக் கையைத் தூக்கிக்கொண்டு நிற்றல், ஒற்றைக் காலால் நிற்றல் ஆகிய உடலை வருத்துதல் என்னும் செயல்களில் ஈடுபடுகின்றனர். ஆசைகளை அடக்குவது உண்மையான தவமாகும். எந்த ஆசையும் உன் உள்ளத்தில் தலையெடுக்கா வண்ணம் பார்த்துக் கொள். அலி அல்லது பேடு ஒருவனுக்குச் சமய வாழ்வு இல்லை. கீழான ஆசையை மேலான ஆசையாக மாற்றியமைக்கவேண்டும். உடலை வருத்துவதால் ஆசையை ஒழித்து விட முடியாது.

மன அடக்கமும், தியானப் பயிற்சியும் சேர்ந்தே நிகழவேண்டும். தியானம் பண்ணிப் பழகாதவர்களுக்கு மனம் அடங்குவதில்லை. மனம் அடங்காதவர்களுக்குத் தியானம் கூடுவதில்லை. மனத்தை அடக்கிய பின் தியானப் பயிற்சி பெறலாம் என்று எண்ணுவாயானால் நீ சாதனம் செய்ய முடியாது. அலை ஓய்ந்த பின் கடலில் குளிக்கலாம் என்று நீ எண்ணுவாயானால் நீ கடல் ஸ்நானம் செய்யமுடியாது. ஏனென்றால் கடலில் ஒருபொழுதும் அலை ஓயப்போவதில்லை. அலை வீசுவதற்கிடையில் கடல் ஸ்நானமும் நிகழ்ந்தாகவேண்டும். அங்ஙனம் மன அடக்கப் பயிற்சி பெறுவதற்கிடையில் தியானப் பயிற்சியும் பெற்றாக வேண்டும்.

தியானத்தில் அமர்ந்ததும் உன் மனதில்

தோன்றும் எண்ணங்களையும், ஆசைகளையும் வெறும் கனவாகக்கொள். அவைகள் அநித்தியமானவை என்று நினை. அவைகளிலிருந்து நீ விலகியிருக்கக் கற்றுக்கொள். நீ தூய்மையானவன் என்று நினை. உன் மனம் முழுவதும் சிறிது சிறிதாகத் தூய்மையில் நிரம்பட்டும். தொடர்ந்து நீ தியானம் பண்ணி வந்தால் உனக்குத் தெய்வீக ஒளி ஏற்படலாம் அல்லது ஓங்காரத் தொனியைக் கேட்கலாம். இன்னும் அவைபோன்ற ஆத்மீக அனுபவங்கள் உனக்கு ஏற்படலாம். அவைகளில் நீ கருத்துச்செலுத்த வேண்டாம். அவைகளுக்கு நீ முக்கியத்துவம் கொடுக்க வேண்டியதில்லை. நீ சரியான பாதையில் போய்க்கொண்டிருக்கிறாய் என்பதற்கு அவைகள் அறிகுறிகள் ஆகின்றன.

உனக்கு ஞான அனுபவம் ஏற்படவேண்டுமென்றால் பொறுமையுடனும், விடாமுயற்சியுடனும் சாதனை செய்யவேண்டும். தக்க காலம் வரும்பொழுது உனக்கு ஞானம் உண்டாகும். உரிய காலத்தில் கடவுள் உனக்கு அருள்புரிவார். "காலாவதி ஆவதற்கு முன்பு தாய்ப் பறவை முட்டையை உடைக்காது" என்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் பகர்வது வழக்கம். பொறுமையை இழந்து விடாதே. பொறுமையை மிகவும் கடைப்பிடி. சாதனையைச் செய்து கொண்டிருப்பதற்கிடையில் பொறுமையையும் கடைப்பிடிக்கவேண்டும். காத்துக் கொண்டிருக்கின்ற காலம் கஷ்டமானதாக இருக்கும்.

ஒரு சமயம் உனக்கு நம்பிக்கை ஏற்படும். மறுசமயம் உனக்கு அவநம்பிக்கை உண்டாகும். ஒரு சமயம் மகிழ்ச்சி உண்டானால் அம்மகிழ்ச்சியைத் தொடர்ந்து துயரம் வரும். இங்ஙனம் நலமும், பொலமும் மாறி மாறி வந்து கொண்டிருக்கும். பல நாட்கள் இங்ஙனம் போராடிக் கொண்டே இருக்கவேண்டும். கடைசியாகக் கடவுள் ஞானம் உண்டாகும் பொழுது போராட்டம் நின்றுவிடுகிறது.

பக்தியை வளர்ப்பதற்கு நீ கடைப்பிடிக்க வேண்டிய விதிகள் உண்டு. சத்சங்கத்தையே நீ எப்பொழுதும் சார்ந்திருக்க வேண்டும். அருளாளர்களுடைய உபதேசத்தைக் கேட்டு அதற்கேற்ப உன் வாழ்க்கையை உருவாக்க வேண்டும். பிரம்மச்சரிய வாழ்வில் நிலைபெற்றிருக்கவேண்டும். தியானம் பழகி வரவேண்டும். பிரம்மசரியத்தை அனுசரிப்பதன் மூலமாகத்தான் உன் மனம் தெளிவடைகிறது. ஞானிகளுடைய உபதேசமும், சாஸ்திரங்களின் உண்மைகளும் பிரம்மசரியம் கடைப்பிடிக்கும் பொழுது தான் உனக்கு விளங்கும். ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய உபதேசங்களைப் படித்து அவற்றைக் குறித்து தியானம் செய்து பழகு. கடவுளைக் குறித்துத் தியானம் செய்து பழகுகின்ற அளவு சாஸ்திரங்களைத் தெளிவாக அறிந்துகொள்ள முடியும். கடவுளைப் பற்றிச் சிலர் எடுத்துக்கூற அதைக் கேட்டு நீ கடவுள் ஞானம் பெறுவது ஒரு முறை. கடவுள் ஞானம் உடையவர்களோடு வாழ்ந்து வரும்பொழுது உனக்குக் கிடைக்கும் கடவுள் ஞானம் மற்றொரு விதமானது. கடவுளைப்பற்றிய அனுபவ ஞானமோ இவ்விரண்டைக் காட்டிலும் முற்றிலும் மேலானது.

பேர் புகழில் ஆசை வைக்காதே. காமத்துக்கு வசப்படாதே. சிற்றின்ப ஆசை பரத்தை அடைவதற்கு இடைஞ்சலாகும். பேர் புகழைப் பெறுவது சுலபம். ஆனால் அவற்றைத் துறப்பதுதான் தெய்வீகமாகும். தெய்வத்தன்மை பேர் புகழிலும் மேலானது. தெய்வச் சிந்தனையில் ஈடுபட்டிருப்பவர்கள் உத்தமர்கள் ஆகிறார்கள். அவர்களுடைய இணக்கம் உனக்குப் பெருநலனை விளைவிக்கும். அவர்களோடு இணங்கி இருப்பதும், அவர்களுக்குத் தொண்டு புரிவதும் உனக்குக் கிடைத்துள்ள பெரும் பாக்கியமாகும்.

சத்சங்கம் சாதனைக்குப் பெரும் துணைபுரியும். உயர்ந்த நூல்களைக் கற்பதும், ஜபம் பண்ணுவதும் நல்லார்களோடு இணங்கி இருப்பதும், கடவுளுக்காகக் காரியம் செய்வதும் நம் உள்ளத்தில் நல்ல சம்ஸ்காரங்களை உண்டு பண்ணுகின்றன. ஆரம்ப சாதகர்கள் நல்லார்களுடைய கூட்டத்தில் இருப்பது தான் நல்லது. முறையாக ஆலய வழிபாடு செய்வதும் சத்சங்கமாகும். ஆலய வழிபாட்டை முறையாகச் செய்யும் பொழுது உடலும், உள்ளமும் தூய்மையடைகின்றன. உள்ளம் பெரும் கோயிலாகவும், உடல் ஆலயமாகவும் உன்னிடத்தில் மாறவேண்டும். ஆலய வழிபாடு உன் உள்ளத்தின்கண் அருட்சக்தியை வளர்க்கும்.

---

# என் குருநாதர்

(சுவாமி விவேகானந்தர் நியூயார்க் நகரில் நிகழ்த்திய சொற்பொழிவு)

[372ஆம் பக்கத் தொடர்ச்சி]

ஒவ்வொரு மதப்பிரிவிலும் அனுபூதிமான்கள் இருந்திருக்கின்றார்கள். மற்ற மதப்பிரிவுகளிலிருந்து ஒதுங்கியிருக்கும் முகம்மதிய மதத்திலும் அனுபூதிமான்கள் தோன்றியிருக்கிறார்கள். அனுபூதிமான்கள் யாவரும் அருளியுள்ள கருத்தாழமுள்ள வார்த்தைகள் வருமாறு: ''இறைவா! நீ யாவர்க்கும் தலைவன். எல்லாருடைய உள்ளத்திலும் நீ இருக்கின்றாய். யாவர்க்கும் நீ வழிகாட்டியாக இருக்கின்றாய். யாவர்க்கும் நீ குருவாக இருக்கின்றாய். உன்னுடைய குழந்தைகளை நீ அளவு கடந்த அன்போடு கவனித்து வருகின்றாய். உன்னுடைய குழந்தைகளை நீ கவனிப்பது போன்று நாங்கள் கவனிக்க முடியாது.'' யாருடைய விசுவாசத்தையும் நீ கெடுத்து விடாதே. உனக்கு இயலுமானால் பிறர்க்கு நல்லதைச் செய். ஒரு மனிதன் எந்தநிலையில் இருக்கிறானோ அந்த நிலையிலிருந்து அவன் முன்னேறுவதற்கு உன்னால் ஆன உதவியைச் செய். ஒருவருடைய வளர்ச்சிக்கு உதவியாக இருக்கவேண்டும். அவரிடமுள்ள எந்த நல்லியல்பையும் கெடுத்துவிடாதே. ஒரு கண நேரத்தில் தம்மை ஆயிரம் மனிதர்களாக மாற்றிக்கொள்ள யாருக்கு முடியுமோ, அவரே உண்மையான குரு ஆவார். சிஷ்யனுடைய நிலைக்கு இறங்கி வந்து அவனுக்குப் போதிக்கும் குருவே உண்மையான குரு ஆவார். கண்கொண்டு கடவுளைக் காணவும், காது கொண்டு கடவுள் மகிமையைக் கேட்கவும், மனம் கொண்டு அவரைக் கிரகிக்கவும் சிஷ்யனை ஆயத்தப்படுத்துகின்ற குரு உண்மையான குரு ஆகிறார். அத்தகைய குருவே உண்மையைப் போதிக்கமுடியும். நாஸ்திகம் பேசுகிறவர்களும், அழிவை உண்டாக்குகிறவர்களும் தங்களை ஆசாரியர்கள் என்று சொல்லிக்கொள்கிறார்கள். ஆனால் அவர்களால் உலகுக்கு எந்த நன்மையும் செய்ய முடியாது.

இந்தச் சரீரத்தில் இருக்கும்பொழுதே, மனிதன் தன்னைப் பரிபூரணனாகச் செய்துகொள்ள முடியும் என்பதை என் குருநாதர் சாந்நித்தியத்தில் நான் உணர்ந்திருக்கின்றேன். அவர் வாயினின்று சபிக்கும் வார்த்தைகள் வந்ததில்லை. அவர் யாரையும் குறைகூறினதில்லை. அவருடைய கண்கள் கேட்டைக் காண்பதினின்றும் அப்பாற் போய்விட்டன. அவர் மனம் கேட்டை நினைக்கின்ற சக்தியையும் இழந்துவிட்டது. அவர் நன்மையைத் தவிர வேறு ஒன்றையும் பார்த்ததில்லை. அவரிடமிருந்த தூய்மையும், தியாகமும் அளப்பரிய சக்தி உடையவையாக இருந்தன. செல்வத்தினாலோ, புத்திரசந்தானத்தினாலோ அழியாப் பெருநிலையை அடைந்துவிட முடியாது. தியாகத்தினால்தான் அழியாப் பெருநிலையை அடைவது சாத்தியம். வேதங்கள் இங்ஙனம் பகர்கின்றன. ''உன்னிடத்திலுள்ள அனைத்தையும் ஏழைகளுக்குக் கொடுத்துவிட்டு என்னைப் பின்பற்று'' என்று இயேசுநாதர் பகர்கிறார். இங்ஙனம் எல்லாத் தீர்க்க தரிசிகளும் கூறியிருப்பதோடு அவற்றைத் தங்கள் வாழ்க்கையிலும் கடைப்பிடித்திருக்கிறார்கள். தியாகமில்லாது உயர்ந்த ஆத்ம ஞானத்தை எப்படிப் பெறமுடியும்? எல்லா மதக்கொள்கைகளுக்கும் தியாகம் முதுகெலும்பு போன்றதாக அமைந்திருக்கிறது. தியாகம் குறைகின்ற மதத்தில் புலன் இன்பம் புகுந்துவிடுகிறது. மதம் எந்த அளவு இந்திரிய சுகத்துக்கு இடம் கொடுக்கிறதோ, அந்த அளவுக்கு அந்த மதத்தில் ஆத்ம ஞானம் குறைந்துவிடும்.

என் குருநாதர் தியாகத்தின் உருவமாக இருந்தார். எங்கள் நாட்டில் சந்நியாசி ஆகுபவன் உலக சொத்துக்களையும், பட்டம் பதவிகளையும் விட்டுவிடவேண்டும். என் குருநாதர் அவற்றை முழுமையாகத் துறந்திருந்தார். தங்களிடமிருந்து அவர் ஏதாவது பெற்றுக்கொள்வாரானால் தாங்கள் பாக்கியவான்கள் என்று எண்ணியவர்கள் பலர். அவர் பெற்றுக்கொள்ள விரும்பியிருந்தால் ஆயிரக்கணக்கான ரூபாய்களை அளிப்பதற்கு மக்கள் ஆயத்தமாக இருந்தார்கள். ஆனால் அத்தகைய மனப்பான்மை உடையவர்களிடமிருந்து என் குரு

நாதர் விலகிப் போய்விடுவார். காமத்தையும், காசு ஆசையையும் துறந்த தீரராகத் திகழ்ந்தார். அவ்விரண்டைப்பற்றிய எண்ணமே இல்லாதவராக இருந்தார். இக்காலத்துக்கு அத்தகைய மக்கள் தேவை. பணமில்லாது வாழ்க்கை நடத்த முடியாது என்று எண்ணுகின்ற இக்காலத்திய மக்களுக்கு அத்தகைய தியாக புருஷர் அவசியமாகிறுர். கடவுள் நம்பிக்கையின்றி பொன்னுக்கும், போகத்துக்கும், புகழுக்கும் அலையும் மக்களுக்குத் தியாகத்தின் பெருமையை எடுத்துக் காட்டும் அத்தகைய மனிதர் ஒருவர் அவசியம். இக்காலத்தில் அத்தகைய மனிதர்களும் இருக்கிறுர்கள்.

மக்களிடம் பேரன்பு காட்டியது அவருடைய மற்றெரு அம்சமாகும். அவரது வாழ்க்கையின் முற்பகுதியில் ஞானச் செல்வத்தைத் திரட்டினர். வாழ்க்கையின் பிற்பகுதியில் அதை மற்றவர்களுக்கும் எடுத்து வழங்கினர். சமயாச்சாரியர்கள் அல்லது துறவிகளைப் பார்க்கச் செல்வதில் உங்கள் நாட்டுக்கும் எங்கள் நாட்டுக்கும் வித்தியாசம் உண்டு. அவரிடம் ஏதாவது ஒன்றைக்கேட்பதற்காகச் சிலர் வருவார்கள். பல மைல்களுக்கப்பால் இருந்து நடந்து வந்து ஒரு கேள்வி கேட்டு விடைபெறுவார்கள். அவரிடமிருந்து ஒரு வார்த்தையைக் கேட்பதற்காகப் பல மைல்களுக்கப்பால் இருந்து வருவார்கள். "நான் கடைத்தேறுவதற்கு ஒரு வார்த்தை கூறுங்கள்" என்று ஒரு சிலர் கேட்பார்கள். என் குருநாதர் எங்கு இருக்கின்றுரோ அங்கு மக்கள் கூடிவிடுவார்கள். ஒரு மரத்தடியில் இருக்கிறுர் என்பதை அறிந்தால் அங்கு வந்து அவரைச் சூழ்ந்து நிற்பார்கள். ஒரு கூட்டம் அவரிடமிருந்து விடைபெற்றுக்கொண்டு போய்விட்டால் மற்றெரு கூட்டம் அங்கு வந்துவிடும். இரவும் பகலும் ஓய்வில்லாது அவர் பேசிக்கொண்டே இருக்க வேண்டும். மக்கள் வந்து குவிந்துகொண்டே இருப்பார்கள். வந்தவர்களுக்கெல்லாம் அவர் உபதேசம் செய்துகொண்டே இருப்பார்.

மக்கள் அவர் உபதேசத்தைக் கேட்பதற்குக் கூட்டம் கூட்டமாக வந்தனர். ஒரு நாளைக்கு இருபத்து நான்கு மணிநேரத்தில் இருபது மணிநேரம் அவர்களுக்கு உபதேசம் செய்துகொண்டிருப்பார். இங்ஙனம் உபதேசம் செய்வது மாதக் கணக்கில் நிகழ்ந்து வந்தது. சரீரம் இடம் தரும் வரையிலும் அவர் உபதேசம் செய்துகொண்டே இருந்தார். மக்களிடத்தில் அவர் வைத்திருந்த பேரன்பு அவரை அங்ஙனம் உழைக்கும்படி தூண்டியது. அத்தகைய உழைப்பின் மூலம் உடம்பு பாதிக்கப்பட்டபோதிலும் அவர் உபதேசத்தை நிறுத்தவில்லை. அவர் உதவியை நாடினவர்கள் அனைவரும் உதவி பெற்றனர். அவர் அதிகம் பேசியதன் விளைவாக அவரது தொண்டையில் நோய் ஏற்பட்டது. அப்பொழுதும் அவர் உபதேசம் செய்வதை நிறுத்தவில்லை. அவரைப் பார்ப்பதற்காக வந்தவர்களை அன்போடு வரவேற்று அவர்கள் கேட்கும் கேள்விகளுக்கெல்லாம் பதில் கூறி அவர்களைத் திருப்தி பண்ணி அனுப்புவார். உடல் சீர்கெட்ட நிலையில் அவர் உபதேசம் செய்வதை நிறுத்த வேண்டும் என்று சொன்னபொழுது அவர் கூறிய பதிலாவது:"நான் உடலைப்பற்றிக் கவலைப்படவில்லை. ஒரு மனிதனுக்கு உதவிபுரிவதற்காக, ஆயிரக்கணக்கான சரீரங்களைத் தியாகம் செய்யவும் தயாராக இருக்கிறேன். ஒருமனிதனுக்கு உதவுவதில் நான் மகிமை காண்கின்றேன்." ஒரு தடவை அவரைப்பார்த்து ஒரு மனிதன் கேட்டதாவது: "நீங்கள் பெரிய யோகியாக இருக்கிறீர்கள். உங்கள் மனதைச் சரீரத்தின் மீது செலுத்தி உங்கள் நோயை ஏன் குணம்செய்து கொள்ளக் கூடாது?" முதலில் சிறிது மௌனமாக இருந்தார். அதே கேள்வியை அம்மனிதர் திருப்பித் திருப்பிக் கேட்டார். பலதடவை கேட்ட பிறகு அம்மனிதருக்கு அவர் அமைதியாகப் பதில் கொடுத்ததாவது: "நண்பரே, நீங்கள் சிறந்த ஞானி என்று நான் எண்ணியிருந்தேன். ஆனல் நீங்கள் உலக மக்களைப் போல் பேசுகிறீர்கள். என் மனதை நான் இறைவனுக்கு அர்ப்பணம் செய்துவிட்டேன். இறைவனுக்குக் கொடுத்த மனதைத் திருப்பி எடுத்து ஆத்மாவுக்குக் கூடாக இருக்கின்ற சரீரத்தின் மீது செலுத்த வேண்டும் என்கிறீர். அது எனக்குச் சாத்தியமாகாது." இங்ஙனம் அவர் மக்களுக்குச் சேவை செய்வதில் இறைவனுடைய கருவியாக இருந்து தம்மை முற்றிலும் அர்ப்பணித்திருந்தார். (தொடரும்)

---

# தெளிந்த உள்ளமும் மெய்ப்பொருள் காட்சியும்

(ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள் 1974ஆம் ஆண்டு திருவேடகம் அந்தர்யோகத்தில் நிகழ்த்திய சொற்பொழிவு)

நாம் ஜீவாத்மாக்களாக இருக்கின்றோம். பிரபஞ்சத்தில் கட்டுண்டு இருக்கின்றோம். பிரபஞ்சக்கட்டிலிருந்து விடுவித்துக்கொள்ள முயல்கின்றவர்கள் முமுக்ஷுக்கள் ஆகிறார்கள். தீவிர சாதனை செய்து வரவர தேகாத்ம புத்தியை வெல்லுகின்றோம். பஞ்சேந்திரியங்களையும் வென்று தர்மத்திற்கு உட்பட்ட வாழ்க்கை வாழ்ந்து வரும்பொழுது நம்மிடம் பக்தி அதிகரிக்கிறது. நாம் ஆத்ம சொரூபம் என்னும் உணர்ச்சி படிப்படியாக நம்மிடம் தெளிவடைந்து வருகிறது. இந்திரியங்களை முற்றிலும் வென்று மனதை அடியோடு அடக்கி தேகாத்ம புத்தியை வெல்லுகின்றபொழுது நாம் ஆத்ம சொரூபம் என்பதை அனுபூதிவாயிலாக அறிகின்றோம். இப்பொழுது நம்மை உபாதிகளோடு கூடிய மனிதர்களாக அறிகின்றோம். ஜன்மாந்தரங்களில் நாம் பெற்ற வாசனைகளும் தேகாத்ம புத்தியும் சேர்ந்து நம்முடைய இயல்பு உருவாகியிருக்கிறது. பிரகிருதி சம்பந்தமான உபாதிகளை ஒழித்து விட்டுத் தூய நிலையில் நம்மை அறிகின்றவிடத்து நம் அறிவு தெளிந்த பேரறிவு ஆகிறது. பேரறிவின் மூலம் நாம் பேரானந்தம் அடைகின்றோம். ஆத்மப் பிரகாசத்தோடு பிரபஞ்சத்திலுள்ள எந்தப் பிரகாசத்தையும் சீர்தூக்கமுடியாது. சாதனத்தில் மேலே போகப்போக நம்மை முற்றிலும் உணர்கின்ற நிலை உண்டாகிறது. நம்மை முற்றிலும் உணர்ந்தான பிறகு நாம் ஜீவன் முக்தர்கள் ஆகின்றோம். அப்பொழுது நம் சொரூபத்தில் நாம் இருந்தபடி இருந்துவிடுகின்றோம். சரீரம் விழுவதும் நமக்குத் தெரிவதில்லை. சரீரம் இருக்கும்பொழுது ஜீவன் முக்தர்களாகவும், சரீரம் விழுந்தபின் கைவல்ய நிலை அடைபவர்களாகவும் நம்மை ஆக்கிக்கொள்வதற்கு நம்மைப் பக்குவப் படுத்துவது நல்ல ஆத்ம சாதனம் ஆகிறது. நம் உள்ளம் படிப்படியாகத் தெளிவடைந்து மெய்ப்பொருள் காட்சியைப் பெறுவதற்கு ஏற்ற நிலையை எப்படி அடைகிறது என்பதைத் தாயுமானவர் உணர்த்தியிருக்கிறார். அதை நாம் ஆராய்வோம்.

சிற்றுயிராக வாழ்க்கையைத் துவக்கிப் பரிபூரணத்தைப் போய் எட்டுகின்ற பரியந்தம் ஏற்படும் நிலையைத் தாயுமானவர் விளக்குகின்றார். இவன் மனிதன், இது விலங்கு, இது பறவை என்று நமக்குக் கண் கூடாகத் தெரிகிறது. மனிதருடைய பாங்கும் ஓரளவு விளங்குகிறது. எது அறிகிறதோ அது ஆத்ம சொரூபம். மனிதன் போன்று செய்துவைத்துள்ள பொம்மைக்கு ஒன்றும் தெரியாது. அதற்குப் பக்கத்தில் நாம் இருந்தாலும் நாமிருப்பது அதற்குத் தெரியாது. நம்மைப் பார்க்கின்றோம், சூழ்நிலையைப் பார்க்கின்றோம். நம்மிடத்தில் எது பார்க்கின்றதோ அது ஆத்மா. சிற்றுயிர்களாகிய பறவைகள், விலங்குகளிடத்து அறிவு இருக்கின்றது; பரிபாகம் அடையாத மனிதனிடத்து அறிவு இருக்கிறது; பரிபாகம் அடைந்து வருகிற மனிதனிடத்து அறிவு இருக்கிறது; முற்றிலும் பக்குவம் அடைந்த மனிதனிடத்து அறிவு இருக்கிறது. மற்றெல்லாரிடத்து இருக்கும் அறிவைக் காட்டிலும் பக்குவம் அடைந்த மனிதனிடத்து அறிவு தெளிவாக இருக்கிறது. தெரிதல் அல்லது அறிதல் சிற்றுயிர்களிடமிருந்து படிப்படியாகத் தெளிவடைந்து முற்றிலும் பக்குவமான மனிதனிடத்துப் பூரணத் தெளிவடைந்திருக்கிறது. இதனைப் பரமஹம்சர் ஒரு உபமானத்தில் பகர்கின்றார். "தீபம் ஒன்றைச் சுற்றிலும் பட்டைக் கண்ணாடிகள் வைக்கப்பட்டிருக்கின்றன. கருமை நிறமாக இருக்கின்ற கண்ணாடிகளைக் கவனித்துப் பார்த்தால் தீபம் மினுக் மினுக்கென்று எரிவது தெரியும். கண்ணாடியினுடைய நிறம் தெளிவடைந்து வரவர உள்ளிருக்கின்ற தீபம் நன்றாகத் தெரிகின்றது. நிறமற்றுச் சிறிது மலினப்பட்டிருக்கின்ற கண்ணாடியில் வெளிச்சம் நன்றாகத் தெரிகிறது. சுத்தப்படுத்திய கண்ணாடியில் கண்ணாடியிருந்தும் கண்ணாடி தெரியாது; தீபம்தான் தெரியும். சுத்தமான கண்ணாடி இருப்பதே தெரியாது. ஈ பறந்துபோய் ஜன்னலில் இருக்கும் கண்ணாடி

யில் மோதுகிறது. கண்ணடி இருப்பது அதற்குத் தெரியாததால் அது அங்ஙனம் மோதிக்கொள்கிறது. மனதில் சத்வகுணம் ஓங்கும்பொழுது மனது தூய கண்ணடிக்கு நிகராகிறது. சத்வ குணம் ஓங்கப்பெற்ற மனதில் கடவுள் தரிசனம் உண்டாகிறது. மனோ நாசம் செய்வது கண்ணடி உடைந்து விடுவதற்கு நிகர் ஆகும். சுத்தக் கண்ணடி இருந்தால் அதில் அழுக்குப்படிவதற்கு வாய்ப்பு இருக்கிறது. கண்ணடி உடைந்து விட்டால் பிறகு அழுக்குப் படிவதென்பதில்லை. சுத்த மனது உடையவனும் பதிதனுகிவிடலாம். மனம் நாசமாகி விட்டால் பிறகு கீழ்நிலை என்பது இல்லை. ''வெட்டவெளி மெய்யென்றவர்க்குப் பட்டாங்கம் ஏதுக்கடி குதம்பாய்'' என்கிருர் தாயுமானவர். வெட்ட வெளி மலினப்படுவதில்லை. அங்ஙனம் குணதீதத்துக்குப் போனபிறகு கீழ்நிலை என்பதில்லை; பரத்தோடு ஒன்றுபட்ட நிலை ஆகிவிடுகிறோம்.

நீந்துவன, ஊர்வன, பறப்பன, நடப்பன ஆகிய ஜீவகோடிகள் அனைத்தும் தேகம் எடுத்திருப்பதினல் பூதங்களால் ஆக்கப்பட்டவை என்று சொல்கின்றோம். அறிவு மங்கிய நிலையில் இருப்பவன் விழித்துக்கொண்டிருக்கும்பொழுதே தூங்குகின்றவன் போன்று இருப்பான். ''கண்ணடிப் பெட்டிக்குள் வைத்திருக்கின்ற வஸ்துவைக் காண்பது போன்று தேகத்துக்குள் இருக்கின்ற ஜீவாத்மாவை நான் காண்கின்றேன்'' என்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் பகர்கின்ருர். நாம் ஒருவரைப் பார்த்து உத்தேசமாக நல்லவன் அல்லது கெட்டவன் என்று சொல்கிறோம். பிறகு அவனை ஆராய்ச்சி செய்து அவனைப்பற்றி முன் கொண்டிருந்த அபிப்பிராயத்தை மாற்றிக்கொள்ளவும் செய்கிறோம். நாம் பார்ப்பதிலுள்ள குறை நிலை நம் அபிப்பிராயத்தை அடிக்கடி மாற்றிக்கொள்ளும்படி செய்கிறது. ஸ்ரீ ராமகிருஷ்ணர் ஒருவரைப் பார்த்து அவர் இத்தகையவர் என்று முடிவு கட்டுவாராஞல் பிறகு அந்த அபிப்பிராயத்தை மாற்றமாட்டார். நரேந்திரனைப் பார்த்ததும் ''இவன் பெரிய காரியத்துக்காக வந்த சித்த புருஷன் ஆவான்'' என்று முடிவு கட்டினர். அந்த அபிப்பிராயத்தை அவர் மாற்றவேயில்லை. ''நரேந்திரன் கெட்டவர்களோடு பழகுகிருன். ஆகையால் அவனோடு சகவாசம் வைக்கக் கூடாது'' என்று பலர் கூறினர்கள். ராமகிருஷ்ணர் அக்கூற்றைப் பேசாது கேட்டுக்கொண்டார். நரேந்திரன் யார் என்பது அவருக்கு நன்ருகத் தெரிந்திருந்தது. ஆகவே அவனைப்பற்றி அவர் சிறிதும் ஐயம்கொள்ளவில்லை. பஞ்சமகா பாதகங்களைச் செய்து பெரிய பாவியாக இருந்தும் கிரீஷ்சந்திர கோஸைச் சந்திக்கும் வாய்ப்பு பரமஹம்சருக்கு ஏற்பட்டது. அவரைப் பார்த்தவுடன் ''அவருடைய அந்தக் கரணம் பெரிய நிலைக்கு வரக்கூடிய பாங்கில் இருக்கிறது'' என்று முடிவு கட்டினர். அந்த அபிப்பிராயத்தை அவர் மாற்றவேயில்லை. கிரீஷர் பரமஹம்சரிடம் வருவதற்குத் தகுதியற்றவர் என்று சிலர் ஆட்சேபம் சொன்னர்கள். அந்தக் கூற்றுக்கு ராமகிருஷ்ணர் செவிசாய்க்கவில்லை. அந்தக் கரணம் தெளிவடைய அடைய தன்னை யறிவதும் மற்றவர்களை அறிவதும் தெளிவுற அமைகிறது. நீந்துவன, ஊர்வன, பறப்பன, நடப்பன ஆகிய யாவுமாகப் பரமாத்மா விளையாடுகிருர் என்று ஞானி காண்கின்ருன். உயிர்களின் புறத் தோற்றத்தை மட்டும் நாம் காண்கின்றோம். ஆனல் உயிர்களின் உள்ளிருக்கும் ஆத்ம சொரூபத்தை ஞானி காண்கின்ருன். எல்லா ஜீவர்களின் உள்ளத்திலும் பரமாத்மா இருக்கின்ருர். ஜீவர்களெல்லாம் பரமாத்மாவுக்கு வாகனங்கள் ஆகின்றன. இறைவனுக்குப் பறவைகளையும், விலங்குகளையும் வாகனங்களாக அமைத்திருப்பது இவ்வுண்மையை விளக்குவதற்கேயாம். ஞானிகளுக்குள்ள பரதிருஷ்டி உயிர்களிடத்துச் சமதிருஷ்டியாக இருக்கிறது.

உயிர்களுக்கு அமைந்துள்ள சரீரங்கள் யாவும் பஞ்சபூதங்களால் ஆனவை. அத்தேகங்களுக்குள் இருக்கும் ஆத்மா பிரபஞ்சத்திற்கு அப்பாற்பட்டது. பஞ்சபூதங்களை அது கடந்து இருக்கிறது. உயிர்களின் அந்தக்கரணத்திற்கு ஏற்றாற்போல் அது வெவ்வேறு ஜீவர்களாக விளங்குகிறது. மயக்கத்தால் உயிர்கள் பஞ்சபூதங்களால் ஆனவை யென்று கருதுகிறோம். பஞ்சபூதங்களை நீக்கி உள்ளிருக்கின்ற ஆத்மாவைக் காணுமிடத்து நம் காட்சி சரியான காட்சியாகிறது. நாம் காண்கின்ற

காட்சி வேறு, உண்மையான காட்சி வேறு என்பதைத் திருமூலர் பாடல் ஒன்று விளக்கிக் காட்டுகிறது. அப்பாடல் வருமாறு:

'' மரத்தை மறைத்தது மாமத யானை
மரத்தின் மறைந்தது மாமத யானை
பரத்தை மறைத்தது பார்முதல் பூதம்
பரத்தின் மறைந்தது பார்முதல் பூதமே.''

பண்டிதன் ஒருவன் பணக்காரன் ஒருவனிட மிருந்து சன்மானம் வாங்கச் சென்றான். பணக் காரனுடைய வீட்டின் வாயிலில் துதிக்கை யைத் தூக்கிக்கொண்டு யானை ஒன்று நின் றது. பண்டிதன் எட்ட நின்று அந்த யானை யைப் பார்த்தான். யானைப்பாகன் இல்லா மல் அதன் அருகில் போவது ஆபத்தென்று எண்ணினான். ஆனால் அந்த யானை துதிக் கையைத் தூக்கியவண்ணமே நின்று கொண் டிருந்தது. அந்த யானையின் காதுகளும், வாலும் அசையாது இருந்தன. பண்டிதன் சிறிது யோசித்தான். துதிக்கை, காதுகள், வால் ஆகிய உறுப்புகள் அசையாது இருக் கின்றன. அது உண்மையில் யானைதானா என்ற ஐயம் அவனுக்கு எழுந்தது. யானை தானா என்று அறிந்து கொள்ளுதற்குக் கல் ஒன்றை எடுத்து அதன்மீது எறிந்தான். கல் அதன்மீது பட்டவுடன் அது யானை அன்று என்று அவன் அறிந்துகொண்டான். கல் மரத்தின்மீது பட்டால் எப்படி ஓசை வருமோ அப்படி ஓசை வந்தது. எனவே அது மரம் என்று தீர்மானித்தான். யானையாகப் பார்த்த பொழுது மரம் மறைந்திருந்தது. மரமென்று அறிந்த பிறகு யானை போய்விட்டது. மரம் யானையை மறைத்திருந்தது போன்று பஞ்ச பூதங்கள் பரத்தை மறைத்துக் கொண்டிருக் கின்றன. பஞ்சபூதங்கள் மயமாகப் பிரபஞ்சம் இருக்கிறது. பிரபஞ்சமாகக் காணும்பொழுது பரம் மறைந்து விடுகிறது. பரத்தைக் காண் கின்ற பொழுது பிரபஞ்சம் மறைந்து விடு கிறது. பரவஸ்துவைக் காண்பதற்கு நம்மை நாம் ஆயத்தப்படுத்தி வருகின்றோம். அந்தக் கரணசுத்தி அடைகிற பொழுது பரமாகக் காண்கின்ற அறிவு தெளிவடைகின்றது. அறிவு தெளிந்தான பிறகு பரவஸ்து எந்த வடி வத்திலிருந்தாலும் அதைப் பரவஸ்துவாகக் காண்கின்ற நிலை நமக்கு உண்டாகிறது. பர வஸ்து தரிசனம் பெற்றவனுக்கு ஜீவபோத மில்லை. அவன் ஜீவர்களுக்கிடையே பேதமும் காண்பதில்லை. உள்ளம் தெளிவடைந்து மெய்ப்பொருள் காட்சி காண்பவனுக்குத் தெய் வம் இத்தனை வடிவங்களில் விளையாடுகின்றார் என்பது விளங்குகின்றது.

பிறக்கின்ற ஒன்று ஒரு நாளைக்கு இறந்தே தீரும். உடல் தோன்றுவதால் அது மறைந்தே ஆகவேண்டும். ஆகையால் உடல் அபிமானம் நாம் கொள்ளக்கூடாது. உடலில் வாஞ்சை வைப்பது அக்ஞானம். அது நம்மிடம் பெரிய மயக்கத்தை உண்டுபண்ணுகிறது. முகம்மதி யர்களுக்கிடையில் ஒரு சம்பிரதாயத்தாரிருக் கின்றனர். குழந்தை பிறந்தவுடன் ''ஐயோ குழந்தை பிறந்து விட்டதே! இது ஒரு நாளைக்கு இறந்துபோய் விடுமே'' என்று அவர்கள் அழுவார்கள். செத்தபின் அது கடவுளுக்குரியதாகப் போய்விடுகிறது என்று கருதி அவர்கள் அழுவதில்லை. அது கடவுளி டம் போய்ச் சேரட்டும் என்று மௌனமாகப் பிரார்த்தனை செய்வார்கள். ஆனால் நாம் அவர் களுக்கு நேர்மாறாக நடந்து கொள்ளுகிறோம். நம்மவர்கள் குழந்தை பிறந்தவுடன் சிரிப்பார் கள். அது செத்தபிறகு அழுவார்கள். ஜனனம், மரணம் ஆகிய இரண்டையும் நிகராகக் கருதி வருவது ஆத்மசாதனம். இன்றைக்கிருக்கும் நாம் ஒருநாளைக்கு இருக்க மாட்டோம் என் பதை இடையிடையே நாம் ஞாபகப்படுத்திக் கொள்ளவேண்டும். நாம் அதைச் செய்தால் நமக்குத் தேகத்திலுள்ள வாஞ்சை குறைந்து ஆத்மப்பற்று நம்மிடம் அதிகரிக்கும்.

பிரளய காலம் வரும்பொழுது நிலம் நீரில் ஒடுங்குகின்றது. நீர் நெருப்பில் ஒடுங்குகின் றது. நெருப்பு காற்றில் ஒடுங்குகின்றது. காற்று ஆகாசத்தில் ஒடுங்குகின்றது. ஆகா சம் மூலப் பிரகிருதியில் ஒடுங்குகின்றது. மூலப் பிரகிருதி பரவஸ்துவில் ஒடுங்குகின்றது. பரவஸ்து யாண்டும் இருந்தபடிஇருக்கின்றது. ஐம்பூதங்கள் பரவஸ்துவிடமிருந்து வருவதால் பரவஸ்துவிடம் ஒரு குறையும் ஏற்படுவதில்லை. திரும்பி அவை பரவஸ்துவிடமே ஒடுங்கு வதால் பரவஸ்துவிடம் எவ்வித மாறுதலும் உண்டாவதில்லை. பரவஸ்து நிர்விகாரமாக, சுத்த சைதன்யமாக, அகண்ட பிரக்ஞை மய

மாக யாண்டும் இருந்து வருகிறது. தியானு வஸ்தையில் மூலப் பொருளுக்கு நாம் போக வேண்டும். பூதங்கள் மயமாக இருக்கின்ற உடலேயும், பிரபஞ்சத்தையும் மறந்து மூலப் பொருளில் மனது நிலேபெற்று வர வர மூலப் பொருளுக்கருகில் நாம் செல்லுகின்ருேம். அயர்ந்த உறக்கம் நமக்கு நாள்தோறும் வரும் பிரளயமாகின்றது. அப்பொழுது சூரியனே மேகம் மூடியிருப்பது போன்று நம் பிரக்ஞை யைத் தமோகுணமயமாக இருக்கின்ற பிர கிருதி மூடிக்கொண்டு இருக்கிறது. பிரக்ஞை ஒரு நாளும் அழிந்து போவதில்லே. நாம் தூங்கும்பொழுது பிரக்ஞை நம்மிடத்திலிருந் தது.'நன்ருகத் தூங்கினேம்'என்னும்உணர்ச்சி தூங்கிஎழுந்ததும் நம்மிடமிருக்கிறது. அதுவே நாம் தூக்கத்தை அனுபவித்தோம் என்பதற் குச் சான்ருகிறது. உறக்கத்தில் நாம் மூல நிலேயிலிருக்கின்ருேம். தமோகுணம் நம் மூல நிலேயை மறைத்திருப்பதால் நாம் மூலநிலேயை யறியாதவர்களாக இருக்கின்ருேம். அந்தக் கரணம் சுத்தியடைந்து வர வர சுத்த சத்துவத் தில் தூங்கும் நிலே உண்டாகின்றது. அதனே "ஆங்காரம் உள்ளடக்கி ஐம்புலனேச் சுட் டறுத்துத் தூங்காமல் தூங்கிச் சுகம் பெறுவது எக்காலம்" என்கிருர் தாயுமானவர். அறி துயில் அல்லது யோக நித்திரையில் நம்மை முழுவதும் உணர்ந்து தூங்குகின்ருேம். மனம் பக்குவம் ஆகின்றபொழுதுதான் அந்த நிலே நமக்கு உண்டாகும்.

பரம்பொருளேத் தியானுவஸ்தையில் நாம் உணரலாம். அதற்கு நாம் என்ன செய்ய வேண் டும்? இறைவன் சேஷன். சேஷன் என்ருல் எஞ்சியிருப்பவன் என்பதுபொருள். சந்தைக்கு மக்கள் கூட்டம் காலேயில் அதிகரித்துக் கொண்டே வருகிறது. மாலேப் பொழுதில் கூட்டம் குறைகிறது. இரவில் அங்கிருந்து எல்லாரும் போய்விடுகின்றனர். எல்லாரும் போன பிறகு காவல்காரன் மட்டும் சேஷமாக இருக்கின்ருன்.ஆங்கு கூட்டம் வந்து சென்றதற் குச் சாட்சியாக இருந்தவன் சேஷமாக இருந்த காவல்காரன் ஆவான். சேஷமாக இருக்கின்ற ஆத்ம சொரூபம் தூக்கத்திலும் போவதில்லே, மரணத்திலும் போவதில்லே. அவ் ஆத்மாவை உணருகிறவனுக்கும் மரணம் இல்லே, சரீரம் தகுதியற்றதாகப் போகுமிடத்து ஆத்மா அதை ஒதுக்கித் தள்ளி விடுகிறது. ஆத்மா யாண் டும் தன்னில் தானுக இருக்கின்றது. ஆத் மாவை உணர்வதற்கு மனம் சரீர உணர்வைக் கடந்து போக வேண்டும். சரீரத்தைச் செத்த தாக வைத்து அதைச் சாட்சியாகப் பார்த்துக் கொண்டிருப்பது தியானத்தின் ஒரு முறை யாகும். ரமண மகரிஷி சரீரத்தைச் செத்ததாக வைத்தார். அதை ஒருவஸ்து பார்த்துக்கொண் டிருந்தது. அவ்வஸ்துவைப் பிடித்துக்கொண் டார், அதை விட்டு மாருத நிலேயாக நின்ருர். அப்படி அவர் ஒரு நொடிப்பொழுதில் அடைந் ததைச் சிரத்தையோடு முயன்ருல் நாமும் ஒரு காலத்தில் அடையலாம். ரமண மகரிஷிக்குப் பக்குவம் இருந்ததால் அந்நிலேயை ஒருநொடிப் பொழுதில் பெற்று விட்டார். நாம் யாவரும் அந்நிலேயை அடைந்தாக வேண்டும். உலகங் கள் யாவும் ஒடுங்கிய பிறகும் ஆத்ம சொருபம் ஒடுங்குவதில்லே. அம்பிகைக்கு அமைந்த ஆயிரம் நாமங்களுள் 'மஹா பிரளய சாக்ஷிணி' என்பது ஒரு நாமம். மஹா பிரளயத்தில் எல்லாம் ஒடுங்கிப் போய்விடுகின்றன. பர வஸ்து மட்டும் சாட்சியாகப் பார்த்துக்கொண்டு எஞ்சியிருக்கிறது. பரவஸ்து ஒரு நாளும் அழிந்துபட்டுப் போவதில்லே. அந்த அழியாத பகுதி நம்மிடத்திலும் இருக்கிறது. அதைத் தியானம் பண்ணிப் பழகுதல் வேண்டும். தூய உள்ளம் அப்பரவஸ்துவைத் தியானம் பண்ணு வதற்குத் தேவைப்படுகிறது.

அப்பரவஸ்துவைத் தெளிந்த உள்ளம் கொண்டு பார்த்து இன்னும் என்னென்ன பாங் கில்அது இருக்கிறது என்பதை ஆராய்வோம். வெட்ட வெளியில் மேகங்கள் வந்து கூடுகின் றன. சிதாகாசத்தில் என்னென்னமோ எண் ணங்கள் எழுகின்றன. அகண்டாகார வெட்ட வெளி மேகமில்லாததாக இருகின்றதையும் பார்க்கின்ருேம். அதற்கு நிகராக உள்ளம் ஒரு எண்ணமும் இல்லாது தெளிந்த நிலே யில் இருப்பதையும் காணலாம். அந்நிலேயில் சேஷமாக இருப்பது மெய்ப்பொருள். அது தன்னேத்தானே உணர்ந்து கொண்டிருக்கிறது. போக்கும், வரவும், புணர்வும் இல்லாத பொரு ளாக இருக்கும் ஆத்ம சொருபத்தைத் தியா னித்து அதில் நிலேத்திருந்து பழகு.

பரம்பொருளுக்குப் பற்றுக்கோடு ஒன்றும் தேவையில்லை. சூரிய மண்டலத்தில் இருக்கும் கிரஹங்கள் ஆகர்ஷண சக்தியினால் ஒன்றை ஒன்று இழுத்துப் பிடித்துத் தாங்கிக் கொண்டிருக்கின்றன. அகண்டமாக இருக்கும் வெட்டவெளியில் தாங்கிப் பிடிப்பதற்கு வேறு ஒன்றும் இல்லை. அது தன்மயமாக இருக்கிறது. ஜீவாத்மா சரீரத்தைத் தாங்கிப் பிடித்துக் கொண்டிருக்கிறது. சரீர அபிமானம் இருக்கும் அளவு மரணாவஸ்தையில் திண்டாடுகிறோம். உடல் பற்றுப் போய்விட்டால் தூங்குவது போன்று சாவது சுலபமாகி விடுகிறது. நோய்வாய்ப்படுகிற பொழுது உடல் துன்பம் தெரிகிறது. உடல் பற்று உடையவர்களுக்கு அத்துன்பம் பெரிய பாடமாக அமைகின்றது. உடல் சாவதினால் ஜீவாத்மா சாவதில்லை. ஆத்மாவுக்குப் பற்றுக்கோடு ஒன்றும் தேவையில்லை. அது நிராலம்பமாக இன்பமாக இருக்கிறது. உண்மையில் இருப்பது ஒரு ஆகாசம். அதற்கு மகா ஆகாசம் என்று பெயர். கடத்துக்குள் கட்டுப்பட்டது போன்று இருப்பது கடாகாசம். கடத்தை இங்கும் அங்கும் தூக்கிக்கொண்டு போகிறபொழுது ஆகாசம் போவதில்லை. கடத்தை உடைத்து விடுகிறபொழுது ஆகாசம் உடைந்து போவதில்லை. அது இருந்தபடி இருக்கிறது. செத்துப்போன உடலுக்குக் குடம் உடைத்துக்கொள்ளிவைப்பது வழக்கம். குடம் உடைக்கும் பொழுது குடம் போய்விடுகிறது. ஆகாசம் போவதில்லை. பஞ்சபூதங்களாலான சரீரம் தகனம் ஆகிறது. ஆனால் சரீரத்தில் இருக்கும் ஆத்மா இருந்தபடி இருக்கிறது. குடம் உடைந்த பிறகு ஆகாசம் இருந்தபடி இருப்பது போன்று சரீரம் போன பிறகும் ஆத்மா இருந்தபடிஇருக்கிறது என்ற தத்துவத்தைக் குடம் உடைத்துக் கொள்ளி வைப்பதில் அமைத்து வைத்திருக்கிறார்கள். அக்ஞானத்துடன் மரணம் அடைந்தால் பிறப்புண்டு. அக்ஞானம் சூட்சும சரீரம், காரணசரீரம், விந்துமயமாக இருந்து அதற்கேற்ற இன்னொரு சரீரம் எடுக்கிறது. பிறவி எடுக்காமல் இருப்பது நம்முடைய லட்சியம். தெளிந்த உள்ளம் பெற்று மெய்ப்பொருள்காட்சி காண்பவர்களுக்குப் பிறவி இல்லை.

தியானத்தில் பிரபஞ்ச எண்ணங்களையெல்லாம் ஒதுக்கித்தள்ளி பேர் உணர்வுடன் இருக்கிறாய். அது நிறைநிலை ஆகிறது. தியானத்துக்கு மேல் சமாதிநிலை இருக்கிறது. சமாதியில் ஜீவபோதத்தை மறந்து பரபோதத்தில் இருக்கிறோம். சமாதியில் ஒருவர் இருக்கும் பொழுது அவர் தம்பால் மற்ற ஜீவர்களையெல்லாம் கவர்கின்றார். கிருஷ்ணன் ஓசையின் மூலம் ஜீவர்களை யெல்லாம் தம்பால் கவர்ந்தார். கிருஷ்ணனது குழலோசையைக் கேட்டு ஜீவர்கள் தங்களை மறந்து அதில் மூழ்கினர். ஓசையின் மூலம் அதீதத்துக்குப் போகலாம் என்பதைக் கண்ணன் காட்டியுள்ளான். சமாதிநிலை எத்தகையது என்று ஸ்ரீ ராமகிருஷ்ணரை அன்பர் ஒருவர் கேட்டார். அது விளக்கமுடியாதது என்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் பதில் கூறினார். தாங்கள் சமாதியில் இருப்பதைப் பார்ப்பதற்கு ஆனந்தமாக இருக்கிறது. அச்சமாதிநிலையை எப்படியாவது எனக்குத் தெரிகின்றபடி விளக்க வேண்டுமென்று மறுபடியும் கேட்டார். அதற்கு ஸ்ரீ ராமகிருஷ்ணர் அவ் அன்பரைப் பார்த்து உனக்கு விருப்பமான பட்சணம் எது என்று கேட்டார். ரசகுல்லா எனக்கு விருப்பமான பட்சணம் என்று பதில் கூறினார். ராமகிருஷ்ணர் அவரிடம் பகர்ந்ததாவது: "ஆறடி உயரமுள்ள பீப்பாய் ஒன்று இருப்பதாகக் கற்பனை செய்துகொள். உனக்குப் பிடித்தமான ரசகுல்லா அதில் நிரப்பப்பட்டிருக்கிறது. உன் உள்ளங்கால் முதல் உச்சந்தலை வரை நாவாக மாறிவிட்டது என்று கற்பனை செய்துகொள். உன்னை அந்தப் பீப்பாய்க்குள் தூக்கிப் போட்டால் எப்படி இருக்கும்?" அதைக் கேட்டதும் தம்மை மறந்தவராய் 'ஆ' என்றார். அதுதான் சமாதிநிலை என்றார் பரமஹம்சர். ஒரு மனிதனுடைய போக்கு நமக்குச் சம்மதமாக இருந்தால் முதலில் மனதுக்கு ஆனந்தம் உண்டாகிறது. ஒருவருடைய போக்கு நமக்குச் சம்மதம் இல்லாவிட்டால் நம் உள்ளத்தில் வெறுப்புணர்ச்சி வந்துவிடும். சமாதிநிலைதான் நமக்கு யதார்த்தநிலை. அந்நிலை மற்றவர்களுக்கும் சம்மதம். அந்நிலையை அடைவதற்குத் தியானம் செய்து பழகு. தியானம் செய்கின்ற அளவு மனத்தெளிவு உண்டாகிறது. தெளிந்த உள்ளத்தின் மூலம் நீ மெய்ப்பொருள்காட்சி காண்கின்றாய். (தொடரும்)

---

# ஏகலைவ்யனின் குருபக்தி

[ 392 ஆம் பக்கத் தொடர்ச்சி ]

**அர்ஜுனன் :** ஆச்சாரியரே, என்னுடைய பயிற்சி முழுதும் தங்களுக்குரியது. தாங்கள் எதைச் செய்யும்படி எனக்கு ஆணை இடுகின்றீர்களோ அதை முக்கரணங்களைக் கொண்டு நிறைவேற்ற முயலுகின்றேன்.

**ஆச்சாரியர் :** எதிர் காலத்தில் பாண்டவர்களாகிய நீங்களும் உங்களுடைய தாயாதிகளாகிய கௌரவர்களும் ராஜ்ஜியத்தின் பொருட்டுப் போர் புரியப் போகின்றீர்கள். அப்போராட்டத்தில் விதிவசத்தால் நான் கௌரவர்களுக்காக வென்று போர் புரியப் போகின்றேன். தயங்காது நீ அப்பொழுது என்னை எதிர்த்துப் போர் புரியவேண்டும். இதைத்தான் இரண்டாம் தடவை குருதக்ஷிணையாக உன்னிடமிருந்து வேண்டுகின்றேன்.

**அர்ஜுனன் :** குருதேவா, இறைவனுடைய சங்கல்பம் தாங்கள் சொல்லுவது போன்று அமையுமாயின் தங்கள் ஆணைப்படி தங்களை எதிர்த்துப் போர்புரியத் துணிகிறேன். அவ்வேளையிலும் என் குருபக்தி மாறாதிருக்கும்படி தாங்கள் அனுக்ரஹம் செய்வீர்களாக.

**ஆச்சாரியர் :** அங்ஙனமே ஆகுக. ஓம்.

### காட்சி 6.

(கலையின் பொருட்டு ஏகலைவ்யன் துரோணாச்சாரியரை அணுகுகிறான்.)

**ஏகலைவ்யன் :** குருதேவா, தங்களை வணங்குகிறேன். (கீழே வீழ்ந்து சாஷ்டாங்கமாக நமஸ்கரிக்கிறான்.)

**துரோணர் :** இளைஞா, நீ யார்?

**ஏகலைவ்யன் :** என் தந்தையின் பெயர் வீரவர்மன். அவர் வேடர்களுக்கு வேந்தனாக இருக்கிறார். குருக்ஷேத்ர பூமிக்கு வடபுறம் இருக்கும் வனத்தில் நாங்கள் வசித்து வருகிறோம்.

**துரோணர் :** இங்கு நீ எதற்காக வந்துள்ளாய்?

**ஏகலைவ்யன் :** சின்னஞ்சிறு வயதிலிருந்து தனுர்வேத வித்தையில் எனக்கு விருப்பம் அதிகம். என் போக்கில் ஏதோ ஓர் அளவில் அக்கலையை நான் வளர்த்திருக்கிறேன். ஒரு சிறிதளவு என் தந்தையிடமிருந்தும் மற்ற வேட நிபுணர்களிடமிருந்தும் அப்பயிற்சியை நான் பெற்றிருக்கிறேன்.

**துரோணர் :** அது மிக நன்று. அதே விதத்தில் அக்கலையை மேலும் பயின்று வா.

**ஏகலைவ்யன் :** குருதேவா, நான் வாழ்க்கையில் இலட்சிமாய்க் கொண்டிருப்பது வெறும் வில்வித்தையில் வல்லவன் ஆவது மட்டுமல்ல. அதன் மேலாம் பகுதிகள் மந்த்ர சக்தியோடு கூடியவை என்றும் அத்தகைய மேலாம் பகுதிகளைக் கற்றுக்கொள்ளுதற்குத் திறமை வாய்ந்த குரு ஒருவருடைய துணை வேண்டுமென்றும் கேள்விப்படுகிறேன். ஆதலால் ஆர்வத்தோடு தங்களை நாடி வந்துள்ளேன்.

**துரோணர் :** மந்த்ர சக்தியோடு கூடிய வில் வித்தை ஒன்று இருக்கின்றதென்று நீ யாரிடமிருந்து அறிய வந்துள்ளாய்.

**ஏகலைவ்யன் :** எனக்கு வில்வித்தை கற்பித்துக் கொண்டிருந்த பொழுதெல்லாம் பழங்காலத்தில் தனுர் வேதத்தில் உச்ச நிலை எய்தியிருந்த ரகுராமனைப்பற்றி என் தந்தை எனக்கெடுத்து உரைத்து வந்தார். அதைக் கேட்டதின் விளைவாக நானும் ஓரளவு அக்கலையில் முன்னேற வேண்டுமென்று அவாக் கொண்டிருக்கிறேன்.

**துரோணர் :** பழங்காலத்தில் வசித்து வந்த ரகுராமன் இக்காலத்தில் மண்ணுலகில் இல்லை. அவன் யதாஸ்தானம் சென்றுள்ளான். ஆதலால் அவனுடைய திறமையைப் பற்றி நாம் கேட்டு மகிழ்வுறுவதோடு நம்கடமை முடிகிறது. இக்காலத்தவர்களாகிய நம்மவர்களுக்கு ரகுராமன் படைத்திருந்த தெய்விக தனுர் வேத ஞானம் வாய்க்கமாட்டாது. ரகுராமனுடைய பராக்கிரமங்களைப்பற்றிப்பேசி மகிழ்வடைவது ஒன்றே நமக்குப் போதுமானது.

**ஏகலைவ்யன் :** விப்ர வேந்தே, ஓர் விண்ணப்பம். யுகங்கள் மாறி மாறிக் கீழ்நிலைக்கு இறங்குகின்ற பொழுது தெய்விக வித்தைகளும் தரத்தில் கீழே வருகின்றன. ஆயினும் அவைகள் அறவே அழிந்துப் பட்டுப்போவதில்லை என நான் கேள்விப் படுகிறேன்.

**துரோணர் :** நீ கேள்விப்பட்டது பெரிய

விஷயம்தான். அத்தகைய பெருமக்கள் உலகில் இருந்தால் அவர்களை நீ தேடிக் கண்டுபிடி.

**ஏகலைவ்யன் :** இறைவா, அத்தகைய மஹா புருஷர் ஒருவர் முன்னிலைக்கு நான் இப்பொழுது வந்துள்ளேன் என்று எண்ணி மகிழ்வடைகிறேன். நான் பகர்வதில் குற்றம் ஏதேனும் இருக்குமாகில் என்னை மன்னித் தருளுங்கள்.

**துரோணர்:** என்னிடம் அஸ்திர சஸ்திர வித்தைகள் அமைந்துள்ளன என்று உனக்குச் சொன்னது யார்? அன்னவர்களின் வாக்கு களில் நீ ஏன் விசுவாசம் வைத்துள்ளாய்?

**ஏகலைவ்யன் :** அல்லும் பகலும் தனுர் வேத வித்தையைப் பற்றியே நான் சிந்தனை கொண்டு இருப்பதால் அதற்குரிய நற்செய்தி கள் பலப்பல பெருமக்களிடத்திலிருந்து எனக்கு எட்டுவனவாயின. ஆதலால்தான் பசு இருக்குமிடத்துக்குக் கன்று தானுக ஓடுவது போன்று தங்களை நாடி நான் வந்துள்ளேன். என்னுடைய ஞான வேட்கையைத் தாங்கள் தான் பூர்த்திபண்ணி வைக்கவேண்டும்.

**துரோணர் :** உலக மக்களுடைய போக்கு அலாதியானது. தங்களுக்குப் பிடித்துள்ள ஒரு மனிதனை வான் அளாவத் தூக்கி வைத்துப் பேசுவார்கள். பிடிக்காத மற்ருெரு மனிதனைப் பாதாளத்தில் தள்ளுவது போன்று தாழ்த்தி வைத்துப் பேசுவார்கள். ஊரார் பேச்சைக் கேட்டு நாம் மதிமயங்கிப் போய் விடலாகாது.

**ஏகலைவ்யன் :** பிரபோ, கலையைப் பெறுவ திலேயே நான் கண்ணும் கருத்துமாயிருப் பதால் எது வீண்பேச்சு, எது பொருள் சேர்ந்த புகழ் என்பதை நன்கு உணர்கிறேன். தாங்கள் சாக்ஷாத் பரசுராமரிடமிருந்து தனுர் வேதத்தை முற்றிலும் பயின்று உள்ளீர்கள் என்றும் இக்காலத்தில் தங்களுக்கு நிகரான வில்வித்தை வல்லுநர் யாருமில்லை யென்றும் நான் கேள்விப்பட்டிருக்கிறேன். அதில் முழு நம்பிக்கை வைத்திருக்கிறேன். தங்களுடைய தரிசனத்தாலேயே நான் பாக்கியவான் ஆயி ருப்பதாக உணருகிறேன். என்னை ஏற்றரு ளும்படி திரிகரண சுத்தியுடன் விண்ணப்பிக் கிறேன்.

**துரோணர் :** என்னைப்பற்றி நீ கேள்விப் பட்டிருப்பது முற்றிலும் மெய். ஆயினும் உன் எண்ணம் நிறைவேருது.

**ஏகலைவ்யன் :** பெறமுடியாததைத் தவத் தின் விளைவாகப் பெறலாம் என்பது ஆன் ரோர் வாக்கு. தனுர்வேதக் கலைக்காக வென்றே நான் திரிகரண சுத்தியுடன் தவம் புரிந்து வருகிறேன். ஞான வேட்கை படைத் திருப்பவர்களுக்கு ஞானத்தை நல்குவது ஆன் ரோர் செயல் எனவும் நான் அறிய வருகிறேன். தேவே, கிருபை கூர்ந்து என்னைச் சிஷ்யனுக ஏற்றுக்கொள்ளுங்கள். என்னைத் தாங்கள் புறக்கணித்து விட்டால் என் வாழ்வே அனர்த் தமாய்ப் போய்விடும்.

**துரோணர் :** வில்வித்தையில் நீ இவ்வளவு ஊக்கம் படைத்திருப்பது பாராட்டத் தக்கது. ஆயினும் உன்னை நான் சிஷ்யனுக ஏற்றுக் கொள்ளமாட்டேன்.

**ஏகலைவ்யன் :** தங்கள் அருளுக்கு நான் பாத்திரம் அல்லன் என்பதற்குக் காரணம் ஏதேனும் இருக்குமானல் கிருபை கூர்ந்து அதை எடுத்துக் கூறுங்கள். என்னிடத்து உள்ள குறைநிலையை நிறைநிலையாகத் திருத்தி யமைக்க நான் முயலுகிறேன்.

**துரோணர் :** முயற்சியால் சில குறைகளை அகற்றலாம். வேறு சில குறைகளை எவ்வளவு தான் முயன்ருலும் அகற்ற முடியாது.

**ஏகலைவ்யன் :** பிரபோ, என்னை மன்னியுங் கள். நான் படைத்துள்ள தனுர்வேத ஞான வேட்கையைப் பற்றி எனக்குச் சிறிதேனும் ஐயமில்லை. மனபரிபாகத்தில் என்னிடத்தில் குறை ஏதேனும் இருக்குமாகில் நான் புரிந்து வருகிற தவத்தைப் பன்மடங்கு ஓங்குவித்து அக்குறையை அகற்றி விடுவேன்.

**துரோணர் :** நீ வேட வேந்தனுக்குப் புதல் வன் அல்லவா?

**ஏகலைவ்யன் :** ஆம் பிரபோ. அதை நான் தங்களிடம் ஏற்கனவே இயம்பி ஆய்விட்டது.

**துரோணர்:** வேடர்களுக்கு நான் வில் வித்தை கற்பிக்க மாட்டேன்.

**ஏகலைவ்யன் :** ஞான வேட்கை படைத் திருப்பவன் எக்குடியில் பிறந்திருக்கிருன் என் பதைப் பொருள்படுத்த வேண்டியதில்லை என் பதுதானே நியதி. நான் வேட வேந்தனுக்கு

மகனாகப் பிறந்திருப்பதற்குப் பொறுப்பாளி நான் அல்லன். அது தெய்வாதீனமாக நடந்துள்ளது. கலையில் நான் படைத்துள்ள ஆர்வத்தையே தங்களிடம் நான் தெரிவித்துக் கொள்ளுகிறேன். கலை நாட்டத்தை ஆழ்ந்து வளர்த்து வருபவனை ஒருநாளும் புறக்கணிக்கலாகாது என்பதுதானே கோட்பாடு.

துரோணர்: நீ சொல்லுவது முற்றிலும் மெய். நீ கலைக்கு அருகதை வாய்த்துள்ளவன் என்பதை அறிய வருகிறேன். ஆயினும் நான் பூண்டுள்ள திட்டத்தில் நீ இடம் பெற மாட்டாய். போர் புரியத் தகுதி வாய்ந்த க்ஷத்திரிய இளைஞர்களுக்கே என் கலையை எடுத்துப் பங்கிட்டுக் கொடுக்க நான் உத்தேசித்துள்ளேன். அத்தகைய திட்டத்தில் உனக்கு இடமில்லை. ஆகையால்தான் உனக்கு அஸ்த்ர சஸ்த்ர வித்தையை எடுத்து வழங்க மறுக்கிறேன்.

ஏகலைவ்யன்: பிரபோ, தங்களுடைய திட்டத்தை மாற்றியமைக்கும்படி நான் கனவிலும் கருதேன். க்ஷத்திரியர்களாகப் பிறந்திருப்பவர்களுக்கே தங்களுடைய ஞானப் பொக்கிஷத்தைப் பகிர்ந்து கொடுப்பது தங்களுடைய திருவுளப் பாங்கு ஆகில் அது என்னுடைய தௌர்ப்பாக்கியம். ஆயினும் தங்களுடைய திட்டத்துக்கு இடுக்கண் விளைவியாது அடியேனுக்கும் தாங்கள் ஒரு போக்கில் அனுக்ரஹம் பண்ணலாம். அத்தகைய அனுக்ரஹத்தை யாவது எனக்குக் கொடுத்தருளுங்கள்.

துரோணர்: நீ நாடுகிற வேறு அனுக்ரஹம் யாது?

ஏகலைவ்யன்: விப்ர வேந்தே! ஏற்கனவே தங்களை நான் என்னுடைய குருவாக மானஸீகமாக ஏற்றுள்ளேன். அதை இனி நான் எக்காரணத்தை முன்னிட்டாவது எப்பொழுதாவது மாற்ற மாட்டேன். இந்தத் தீர்மானத்தில் நான் நிலைத்திருக்கும்படி என்னைத் தாங்கள் ஆசீர்வதித்தால் போதுமானது. இதுவே எனது விண்ணப்பம்.

துரோணர்: ஏகலைவ்யா, உன்னுடைய குருபக்தியையும் சிரத்தையையும் நான் பாராட்டுகிறேன். மாணாக்கனொருவன் மானஸீகமாக எந்த ஆச்சாரியனை வேண்டுமானாலும் தன்னுடைய குருவாக சங்கல்பித்துக்கொள்ளலாம். அதற்கு யாருமே தடை சொல்ல முடியாது. தடை சொல்லுவதும் பொருந்தாது. உன் இஷ்டம் போல் நீ நடந்துகொள். இங்கே நான் பயிற்சி கொடுத்து வருகிற மாணாக்கர் கூட்டத்தில் மட்டும் உன்னை நான் சேர்த்துக் கொள்ளமாட்டேன்.

ஏகலைவ்யன்: பிரபோ! தாங்கள் கொண்டுள்ள தீர்மானம் ஒரு நாளும் எனக்கு இடைஞ்சல் ஆகாது. மானஸீகமாகத் தங்களை என் குருவாக வைத்துக்கொள்ளுதற்குத் தாங்கள் தடை போடமாட்டீர்கள் என்று பகர்ந்தருளியுள்ளீர்களே அதுவே எனக்குப் போதுமானது. தங்களுடைய அனுக்ரஹத்தால் என்னுடைய இலட்சியத்தை நான் நிறைவேற்றுவேன் என்னும் உறுதி எனக்கு உண்டு.

துரோணர்: இளைஞா, தலைமாணாக்கன் ஒருவனுக்கு இருக்கவேண்டிய தகுதிகளெல்லாம் உன்னிடம் தென்படுகின்றன. ஆயினும் நான் கொண்டுள்ள திட்டத்தினின்று விலகும் எண்ணம் எனக்கில்லை. உனக்கு எல்லா நலன்களும் உண்டாவதாகுக. சென்று வா.

ஏகலைவ்யன்: குருவே துணை, குருவே போற்றி, குருவே போற்றி! போற்றி.

(போகிறான்)

## காட்சி 7.

(ஏகலைவ்யன் புரிகிற மானஸ பூஜை)

ஏகலைவ்யன்: குழந்தை ஒன்றுக்குத் தாயை விட்டுப் பிரிந்திருக்கின்ற நெருக்கடி நேருகின்ற பொழுது அதனுடைய தாயன்பு பன்மடங்கு வளருகிறது. அத்தகைய நெருக்கடியில் நானும் இப்பொழுது இருந்து வருகின்றேன். குருவின் வடிவம் என் மனதைவிட்டு மாறாது மிளிர்ந்துகொண்டிருக்கிறது. அதைப் பற்றி எண்ண எண்ண ஆர்வம் என்னிடத்து அதிகரிக்கிறது. கிருபை கூர்ந்து ஆச்சாரியதேவர் என் உள்ளத்தில் எழுந்தருளியிருக்கிறார். தனுர் வேதக் கலையை நான் பயிலவேண்டுமென்று விரும்புகிறபொழுதெல்லாம் அவர் என் சித்தமிசை வீற்றிருந்துகொண்டு பாடம் புகட்டி வருகிறார். மலர் தானாக மலர்வது போன்று என் உள்ளத்தினுள் கலைஞானம் வடிவெடுத்து வருகிறது. இன்னின்ன பாங்குகளில் வில்லைப் பற்றிப்பிடி. இன்னின்ன பாங்குகளில் அம்பைத் தொடுத்து வை. இன்

வின்ன பாங்குகளில் இலக்கை நோக்கிக் குறி பிடி. இன்னின்ன பாங்குகளில் அம்பு எய்திடு என்றெல்லாம் குருதேவர் எனக்குப் பயிற்சி கொடுத்து வருவதாக நான் உணருகிறேன். நான் பயின்று வரும் வில்வித்தைக்கு விக்கினம் ஏதும் இல்லை. ஆச்சாரியரைத் தரிசித்த நாள் முதற்கொண்டு என்னிடத்துப் புதிய வேகம் ஒன்று உருவெடுத்திருக்கிறது. அது மேலும் மேலும் வளர்ந்துகொண்டே வருகிறது. என்னை நான் பாக்கியவானாக உணருகிறேன். குரு கிருபை பரிபூரணமாக என்மீது அமையப் பெற்றிருப்பதாக அறிகிறேன். ஆர்வம் நிறைந்த இத்தகைய மானஸ பூஜைக்குத் துணைபுரி கின்ற பாங்கில் பாகியபூஜையும் நான் பண்ணி வருவேன். அதற்காகவென்று ஆச்சாரிய தேவரின் விக்கிரஹம் ஒன்றை அமைத்துக் கொள்ளுவேன். காயத்தால் நான் நிறைவேற்ற வேண்டிய குரு கைங்கரியங்களை யெல்லாம் அந்த விக்கிரஹத்தின் வாயிலாக அவருக்கு அன்புடன் புரிந்துவருவேன். அவருடைய அனுக்ரஹத்தை முகாமையாக வைத்துக் கொண்டு தனுர்வேதப் பயிற்சியில் தீவிரமாக ஈடுபடுவேன். இதற்கு நிகரான வாய்ப்பு யாதுளது? என்னைக் கிருதார்த்தனாக அறி கிறேன். கிடைப்பதற்கரிய குருவின் அனுக் கிரஹம் எனக்குப் பரிபூரணமாகக் கிட்டியிருக் கிறதென்று உணருகிறேன். பாகிய பூஜைக்கு வேண்டிய ஏற்பாடுகளை யெல்லாம் இனி நான் அமைத்துக்கொள்ளுகிறேன்.

## காட்சி 8.

(பாஹிய பூஜையும், பயிற்சியும்)

துரோணாச்சாரியர் விக்கிரஹத்துக்கு ஏகலைவ்யன் தீபம் ஏற்றுகிறான், தூபம் கொளுத்துகிறான், மாலை சூட்டுகிறான், நைவேத்யம் அமைக்கிறான், தியானம் பண்ணு கிறான், ஆசனம் படைக்கிறான், தோழர்களைக் கூப்பிடுகிறான், தீபாராதனை பண்ணுகிறான். கூடியவர்கள் பஜனை பண்ணுகிறார்கள். ஓம் குரு, சத்குரு, ஹரகுரு ஓம் என்று நாம உச்சா ரணை செய்கின்றனர். (ஆறு தடவை பாடுகிறார் கள்.) ஓம் குரு (ஒருவன்) ஸத்குரு (எல்லோ ரும்)நர்த்தனம் புரிகிறார்கள்.பிரசாதம் வழங்கப் படுகிறது.

## காட்சி 9.

(ஏகலைவ்யன் கனவில் துரோணாச்சாரியார் தோன்றுகிறார்)

துரோணர் : ஏகலைவ்யா, மனிதனுக்கு அமைந்துள்ள வாய்ப்புகளுள் காலம் மிக முக் கியமானது. கணப்பொழுது கணப்பொழுதாக அது கடந்து போய்க்கொண்டே இருக்கிறது. கடந்து போன ஒரு கணத்தை மீண்டும் பெற முடியாது. ஓர் ஊரை நோக்கி நிதானமாக நடந்துபோகிறவன் வேகமாக நடந்து நிதானத் துக்கு ஈடு செய்து கொள்ளலாம். ஒரு காலத் தில் செல்வம் சம்பாதியாதிருந்தவன் மற்றொரு காலத்தில் அதிகப்படி செல்வம் சம்பாதித்துக் குறை செல்வத்தை நிறை செல்வமாக்கலாம். மறந்துபோன பாடத்தை மீண்டும் கற்று அதற்கு ஈடு செய்து கொள்ளலாம். பிறர்க்குச் செய்த தீங்குக்குப் பரிகாரமாகப் பன்மடங்கு நலன் செய்து தீங்கைத் தவிர்க்கலாம். செய்ய வேண்டியதைச் செய்யாது விட்டதற்கு ஈடு ஆக ஒருவன் செயலைப் பன்மடங்கு அதிகப்படுத்த லாம். ஆனால் வீணே கழிந்துபோன காலத் துக்கு ஈடு ஏதுமில்லை. ஆதலால் அறிவு படைத்துள்ள மானுடன் ஒருவன் காலத்தின் மகிமையை நன்கு அறிந்துகொள்ளக் கடமைப் பட்டிருக்கிறான். அதை அறிந்து கொண்ட தற்கு அறிகுறியாக அவன் வீண் பொழுது போக்கலாகாது.

ஏகலைவ்யன்: குருதேவா, தங்கள் போதனையில் பரந்த கருத்து அடங்கி யிருக் கிறது. காலத்தை நன்கு பயன்படுத்தக் கற் றுக் கொண்டவர்கள் பாக்கியவான்கள். என் ஜன்மத்தில் இதுவரையிலும் நான் வீண் காலம் போக்கியதாகத் தெரியவில்லை. இனி மேல் கண்ணும் கருத்துமாகக் காலத்தை நல்ல காரியங்களுக்காகவே பயன்படுத்துவேன். தங் கள் கிருபையால் காலத்தின் மகிமையை இப் பொழுது நன்கு அறிகிறேன்.

துரோணர் : ஏகலைவ்யா, காலத்தை நன்கு பயன்படுத்துவது கடவுள் வழிபாட்டுக்கு நிகரானது. கடவுள் காலசொருபமாகவும், காலத்தைக் கடந்தவராகவும் இருக்கிறார். உடல் எடுத்துள்ள நாம் அனைவரும் காலத் தில் கட்டுண்டிருக்கிறோம். அவ் உண்மையை அறிந்துகொண்டு ஒவ்வொரு கணப்பொழுதை

யும் நன்கு பயன்படுத்துவோமானல் அது கடவுளுக்குப் பிரீதிகரமாகிறது. காலத்தை நன்கு பயன்படுத்துகிறவர்களுக்கு அவருடைய கருணை கிட்டுகிறது.

**ஏகலைவ்யன் :** குருதேவா, தாங்கள் புகட்டுகிற இக்கோட்பாடு மனத்தகத்து மறைந்து கிடந்த மருளைப் போக்குகிறது. முறையாக நாடுகிறவர்களுக்கு இறைவனுடைய அருள் யாண்டும் சொந்தம் என்பதை நான் இப்பொழுது அறிய வருகிறேன். நிச்சயமாக ஆண்டவனுடைய அருளுக்கு என்னை நான் சொந்தமாக்குவேன்.

**துரோணர் :** ஏகலைவ்யா, மற்றும் ஓர் உண்மையை உனக்கு எடுத்து உபதேசிக்கிறேன். அதை ஏற்று நன்கு பயன்படுத்துவாயாக. சிரத்தை என்பது அவரவர் மனநிலையைப் பொறுத்ததாகும். சிரத்தை என்னும் தெய்விக சம்பத்தானது பேருக்கம் எனப் பொருள்படுகிறது. நல்வழியில் மனிதன் எடுத்துக் கொள்ளும் மேலான முயற்சியும் சிரத்தை எனப்பொருள்படுகிறது. 'யோ யத் சிரத்த: ஸ ஏவ ஸ: என்பது வேதவாக்கு.

வெள்ளத் தனைய மலர்நீட்டம் மாந்தர்தம்
உள்ளத் தனையது உயர்வு

என இது பொருள்படுகிறது. சிரத்தையின் வல்லமை ஒரு உதாரணத்தின் வாயிலாக விளக்கப்படுகிறது. சிலந்திப் பூச்சி தன் சரீரத்தினின்று உண்டு பண்ணுகிற நூல் ஆனது மிக மெல்லியது. ஆயினும் அதற்குத் தக்க வேகம் கொடுத்தால் எஃகுத் தகடு ஒன்றை அது பொத்துக்கொண்டு போம் என்பது கோட்பாடு.

சிலந்திப்பூச்சியின் நூல் ஒருவாறு கட்புலனுகிறது. மனிதன் எண்ணுகிற எண்ணமோ மிக நுண்ணியது. அது ஒருபொழுதும் கட்புலனுகாது. ஆயினும் அதன் வேகம் அளப்பரியது. மனிதனுடைய சொரூபத்தையே மாற்றியமைக்க வல்லது எண்ணம். எண்ணியது எண்ணியாங்கு எய்துப எண்ணியர் திண்ணியராகப் பெறின் என்பது மறைமொழி. முறையாக எண்ணுபவன், தன் எண்ணத்தை ஒரு கணப்பொழுதில் நிறைவேற்றலாம். தன் மனதை நன்கு பண்படுத்தியவன் ஒரு கணப்பொழுதில் முக்த புருஷனுகலாம். எண்ணத்தின் திறன் அத்தகையது. மனத்தூய்மைக்கு ஏற்ப எண்ணத்தின் திறன் மேலோங்குகிறது. நல்ல மனம் படைத்தவனுக இரு. மேலான எண்ணத்தையே எண்ணி வா. நீ பெற விரும்புகிற கலைகளெல்லாம் உனக்குப் பணிவிடை செய்கிற பாங்கில் உள்ளத்தில் உருவெடுக்கும்.

(ஏகலைவ்யன் கனவினின்று திடுக்கிட்டு எழுந்திருக்கின்ருன். துரோணர் மாயமாக மறைந்து போகிருர். அவர் புகட்டிய போதனைகளை வியப்புடன் ஏகலைவ்யன் விமரிசனம் செய்கிருன்.)

குரு கடாட்சம், குரு கடாட்சம் என் குருநாதருடைய கிருபையை அளந்தெடுக்க யாருக்குத்தான் இயலும். பசுமரத்தாணிபோன்று இரண்டு பெரிய கோட்பாடுகளை அவர் எனக்குப் புகட்டியுள்ளார். காலத்தை நான் நன்கு பயன்படுத்துவேன். சிரத்தை அல்லது ஊக்கத்தில் நான் மேலும் மேலும் முன்னேற்றமடைவேன்.

நள்ளிரவில் நல்ல கனவு கண்டு விழித்துக் கொண்ட நான் இன்னும் சிறிது நேரத்துக்கு தியானம் பண்ணுவேன். நான் கற்ற கல்வி தியானத்தில் உறுதி பெறும்.

## காட்சி 10.

(வேட இளைஞர்கள் வழிப்போக்கனுக்குத் தடை செய்தல்.)

**முதல் இளைஞன் :** அடே 'தோழர்காள்' மான் மந்தை இந்தப் பாதைக்குக் குறுக்கே போகிற அறிகுறிகள் இவ்விடத்தில் தென்படுகின்றன. தக்க முறையில் இவ்விடத்தில் கண்ணி வைப்போம். பத்து இருபது மான்கள் இவ்வழியைத் தாண்டிப் போகிற பொழுது அவைகளுள் இரண்டு ஒன்ருவது கண்ணியில் மாட்டிக் கொள்ளுவது உறுதி. அப்படி மாட்டிக்கொண்டவைகளை நாம் உயிரோடு பிடித்துக்கொள்ளுவோம்.

**இரண்டாவது இளைஞன் :** கண்ணி வைப்பதில் நாம் வல்லவர்கள் என்பதில் சந்தேகமில்லை. ஆனல் இவ்விடம் வழிப்போக்கர்களுக்குப் பாதையாயிருக்கிறது. நாம் கட்டி வைக்கும் கண்ணி அவர்களுக்கு இடைஞ்சலாயிருக்குமே. வழிப்போக்கர்களுக்கு இடையூறு பண்ணுவது பொருந்துமா?

**மூன்ருவது தோழன் :** இந்த வனந்தரத்

தில் வழிப்போக்கர்கள் வருவது மிக அரிது. சூரிய உதயத்திலிருந்து அஸ்தமனத்துக்குள் நாளொன்றுக்கு நான்கு பேர், ஐந்து பேர் காண்கிறோம். சில நாட்களில் யாரும் வருவது கிடையாது. ஆதலால் நம் திட்டத்தை நிறைவேற்றுவோம்.

**நான்காவது தோழன் :** ஒரு வேளை யாராவது வழிப்போக்கர் வந்துவிட்டால் அவர்களை நாம் நிறுத்தி வைத்தாக வேண்டும். வேறு உபாயமில்லை.

**ஐந்தாவது தோழன்:** இல்லை நாம் நிறுத்தி வைக்க வேண்டியதில்லை. அதோ அந்த மாற்று வழியில் போகும்படி அவர்களைத் தூண்டுவோம்.

(இளைஞர்கள் மான் பிடிப்பதற்காகப் பாடிக் கொண்டும், ஆடிக்கொண்டும் கண்ணி வைக்கிறார்கள். வழிப்போக்கன் ஒருவன் வருகிறான்.)

**முதல் தோழன் :** ஐயா, இந்த வழியில் போக வேண்டாம்.

**வழிப்போக்கன் :** நான் போய்த்தானே ஆக வேண்டும்.

**மூன்றாவது தோழன்:** மான் பிடிப்பதற்கு நாங்கள் இவ்வழியில் கண்ணி வைத்திருக்கிறோம். அதை ஒதுக்கி விட்டுப்போக உனக்கு அனுமதி தரமாட்டோம்.

**வழிப்போக்கன் :** பொது வழியை இப்படி நீங்கள் அடைத்து வைப்பது பொருந்தாது. நீங்கள் வைத்துள்ள கண்ணியைக் கலைத்தெடுங்கள்.

**ஐந்தாவது தோழன் :** கட்டி வைத்துள்ள கண்ணியை நாங்கள்கலைக்கமாட்டோம். திரும்பிச் சிறிது தூரம்சென்று இடப்பக்கம் பிரிகிற ஒடுங்கிய பாதையில் ஐயா நீ போகலாம். அது வளைந்து வளைந்து போய் நெடுந்தூரத்துக்கப்பால் இந்தப் பெரும் பாதையில் வந்து சேர்ந்துவிடும். ஆகையால் தயங்காது ஐயா அந்த வழியில் நீ போகலாம்.

**வழிப்போக்கன் :** அடே சிறுவர்காள், என் முதுகில் பெரிய மூட்டை ஒன்றை மாட்டி வைத்திருக்கிறேன் பாருங்கள். இதைத் தூக்கிக்கொண்டு நான் அனுவசியமாக நெடுந்தூரம் நடக்க வேண்டுமென்று நீங்கள் கூசாது பேசுவது பொருந்தாது.

**முதல் தோழன் :** நாங்கள் கட்டிய கண்ணியைக் கலைக்கமாட்டோம். இவ்வழியில் போக உனக்கு அனுமதி தரமாட்டோம்.

**வழிப்போக்கன் :** மக்களுக்குரிய பொதுப் பாதையில் கண்ணி கட்டி வைப்பதும், வழிப்போக்கர்களுக்கு இடைஞ்சல் பண்ணுவதும் உங்களுக்குப் பொருந்தாது.

**இரண்டு தோழர்கள்:** (சேர்ந்து கொண்டு) மான் பிடிக்க நாங்கள் கண்ணி கட்டி வைத்திருப்பதைக் கலைக்கவேண்டுமென்று நீ கூறுவது பொருந்தாது.

**வழிப்போக்கன் :** கண்ணியை நீங்கள் கலைக்காவிட்டால், அதை நானே கலைத்து விட்டு நான் என் வழியில் போவேன்.

**தோழர்கள் :** நாங்கள் விடமாட்டோம். (கூப்பாடு போட்டுக்கொண்டு கைச்சண்டை நிகழுகிறது. ஏகலைவ்யன் வருகிறான்.)

**ஏகலைவ்யன் :** ஓய் தோழர்களே, நிறுத்துங்கள் உங்களுடைய கைவரிசையை. வழிப்போக்கன் ஒருவனோடு நீங்கள் ஏன் வீண் சண்டை போட்டுக் கொண்டிருக்கிறீர்கள்?

**முதல் தோழன் :** ஏகலைவ்யா! நாங்கள் சொல்லுவதைச் சிறிது காதுகொடுத்துக்கேள். மான் பிடிக்க நாங்கள் இங்கே கண்ணி கட்டி வைத்திருக்கிறோம். அதைக் கலைத்துத் தள்ளி விட்டுப் போக இம்மனிதன் முயலுகிறான். அதற்கு இடம் தரமாட்டோம் என்று அவனோடு வழக்காடுகிறோம். அவனை அம்மரத்தில் கட்டி வைக்க நாங்கள் திட்டமிட்டோம். அதற்குள்ளாக நல்ல வேளைக்கு நீயும் இங்கு வந்துள்ளாய். நீ பக்திமான். நல்வழியில் போகிறவன். நீ அனுமதி கொடுத்தால் போதுமானது. இம்மனிதனைத் திரும்பிப் போகும்படி உந்தித் தள்ளுகிறோம். அவன் போக மறுத்தால் இங்கேயே கையையும் காலையும் கட்டிப் போட்டு விடுவோம்.

**ஏகலைவ்யன் :** தோழர்காள், நீங்கள் வேடச் சிறுவர்கள். முரட்டுத்தனம் படைத்தவர்கள். நீங்கள் காட்டுகிற கைவரிசைதான் நல்வழி என நினைக்கிறீர்கள். அப்படிச் செய்ய வேண்டாம்.

**வழிப்போக்கன் :** மதிப்புக்குரிய இளைஞா, நான் சொல்லுவதைச் சிறிது கவனித்துக்கேள். இந்தப் பெரிய மூட்டையைத் தூக்கிக்கொண்டு

பொது வழியில் நான் போய்க்கொண்டிருக்கிறேன். இந்தப் பாதையில் நான் போகலாகாது என்று இந்த முரட்டுப் பையன்கள் என்னோடு சண்டைபோட்டுத் தடை செய்கிறார்கள். பின்பக்கமிருக்கிற ஏதோ ஓர் ஒடுங்கிய பாதையில் இடப்பக்கம் நான் சுற்றியலைந்து போக வேண்டுமென்று இவர்கள் வாதாடுகிறார்கள். வழிப்போக்கனுக்கு இப்படி இடைஞ்சல் செய்வது நியாயமா என்று நீ எண்ணிப்பார். தயவு செய்து இவர்களுக்குக் கொஞ்சம் புத்தி புகட்டு. தடையேதுமின்றிப் பொது வழியிலேயே நான் போவதற்குக்கொஞ்சம்துணைபுரி.

**ஏகலைவ்யன் :** இளைஞர்காள்! நீங்கள் நடந்து கொண்டது ஒரு பொழுதும் நல்வழியாகாது. நமக்கு எவ்வளவுதான் இடைஞ்சல் ஏற்பட்டாலும் அதைப் பொருட்படுத்தாது வழிப்போக்கர்களாக வரும் வேற்றூர்களுக்கு வேண்டிய வசதி செய்து கொடுப்பது நம் கடமையாகும். பிறர்க்கு உபகாரம் செய்து எவ்வளவு சுலபத்தில் புண்ணியத்தைத் தேடிக் கொள்ளலாம். அதற்கு மாறாகப் படாத பாடுபட்டும் வழிப்போக்கன் ஒருவனைத் துன்புறுத்தியும் நீங்கள் ஏன் பாப மூட்டையைத் தேடிக்கொள்ளுகிறீர்கள்?

**இளைஞர்கள் :** நாங்கள் கட்டி வைத்திருக்கிற கண்ணியைக் கலைக்க வேண்டுமென்று இவன் அதிகாரத்தோடு பேசுகின்றானே. அப்படிப் பேசுவது சரியா?

**ஏகலைவ்யன் :** நெறி வழுவி நடந்து கொள்ளுபவனை நெறி நிற்பவன் அதட்டலாம், மிரட்டலாம். அதிகாரமும் செலுத்தலாம். உடல் பலத்தை முன்னிட்டோ, ஆட்கள் கூட்டத்தின் பலத்தை முன்னிட்டோ யாருக்கும் தீங்கு செய்யலாகாது. தீங்கு செய்கிறவன் தாற்காலிகமாக வெற்றியடையலாம். ஆனால் தீமையினின்று நிலைத்த நலன் ஒரு நாளும் வாராது. நன்மை கடைப்பிடிப்பதற்கு நிகரான அறநெறியில்லை. வல்லான் வகுத்ததே வாய்க்கால் என்னும் தற்பெருமை பூண்டுகொண்டு பிறரைத் துன்புறுத்துவதற்கு நிகரான தீமையில்லை. கொடுமையைக் குதூகலத்துடன் கையாளுபவன் அதிவிரைவில் அழிந்துப்பட்டுப் போவான்.

**தோழர்கள் :** ஏகலைவ்யா, ஏதோவிளையாட்டுத் தனமாக நாங்கள் இம்மனிதனுக்குத் தீங்கு செய்து விட்டோம். இனி இது போன்று நாங்கள் பிழை செய்யமாட்டோம்.

**ஏகலைவ்யன் :** வழிப்போக்கரே, மன்னித்தருளுங்கள். சிறியோர் செய்கின்ற பிழை சிறியதாயினும் பெரியதாயினும் அதைப் பொறுத்தருளுவது பெரியோர் கடமை. இவர்கள் செய்த குற்றத்துக்கு ஈடு ஆக உங்கள் மூட்டையைக் கொஞ்சதூரம் நான் சுமந்து வந்து உங்களை வழியனுப்பி வைக்கிறேன். இச் சிறுவர் செய்த பொல்லாங்கை இப்பொழுதே மறந்து விடுங்கள்.

**வழிப்போக்கன் :** சீலமும், ஒழுக்கமும் நிறைந்துள்ள இளைஞா, உனக்கு வந்தனம். நீ இவ்வேளையில் இங்கு வாராதிருந்தால் நான் பெருந்துயரத்துக்கு ஆளாயிருப்பேன். உன்னுடைய வருகை தெய்வாதீனமானது என்று பாராட்டிப் போற்றுகிறேன்.

## காட்சி 11

(ஒரு பிராமணனுக்கும் ஏகலைவ்யனுக்கும் இடையில் நிகழ்ந்த சம்பாஷணை.)

**பிராமணன் :** இளைஞா, நீ ஆழ்ந்து ஈசுவர உபாசனையில் ஈடுபடுபவன் போன்று தென்படுகிறாய். ஆனால் உனக்கு உபநயனச் சடங்கு நிகழ்ந்திருப்பதாகத் தெரியவில்லை. அந்த வைதிகச் சடங்கு இல்லாது நீ வழிபாட்டில் முன்னேற்றமடைய முடியாது என்பது தெரியுமா?

**ஏகலைவ்யன்:** பெரியோய், நீ பகருவது யாது என்பது எனக்குப் புலப்படவில்லை. எனக்கு விளங்கும்படி விஷயத்தை எடுத்து விளக்கிச் சொல்ல மாட்டாயா?

**பிராமணன்:** சிறுவன் ஒருவனுக்கு வயது சுமார் ஆறு அல்லது ஏழு ஆகியிருக்கும் பொழுது கடவுள் வழிபாடு வேதத்தில்சொல்லி இருக்கிறபடி அவனுக்குப் புகட்டப்படுகிறது. அந்தச் சம்ஸ்காரத்தைச் சான்றோர் ஒருவரிடமிருந்து ஏற்றுக்கொண்ட பிறகே அவன் தெய்வ ஆராதனைக்கு அருகதை உடையவனாகிறான்.

**ஏகலைவ்யன்:** நண்பா, நீ நவிலுவது நகைப்புக்குரிய கோட்பாடாக எனக்குத் தோன்றுகிறது. நான் சுவாசித்து உயிர் வாழ்ந்து

வருகிறேன். இச்செயலை வேறு யாரும் எனக்குத்துவக்கித்தரவில்லை. என்னிடத்துத் தானாக வடிவெடுத்த செயல் இது. பிறர் புகட்டித் தராது நாம் சுவாசிக்கலாகாது என்று தடை செய்வதற்கு நிகராக இருக்கிறது நீ பேசுகிற பேச்சு.

**பிராமணன்:** உயிர்வாழ்வன அனைத்தும் பிறப்பெடுத்த உடனே சுவாசிக்க ஆரம்பிக்கின்றன. பிறர் யாரும் அந்த இன்றியமையாத செயலைப் புகட்டித் தரவேண்டியதவசியமன்று. ஆனால் தேவாராதனை அத்தகையதன்று. குரு சிஷ்ய பரம்பரையாக உபதேசிக்கப்பெற்றே வழிமுறை வழிமுறையாக வழிபாடு நடைபெற்று வருகிறது. குருவின் உபதேசமில்லாது நிகழுகிற ஆராதனை அனர்த்தமாகப் போய் விடுகிறது. எவ்வளவு காலம் மானுடனொருவன் தனக்குத் தோன்றுகிற பிரகாரம் தேவாராதனை செய்து வந்தாலும் அவன் ஒருபொழுதும் முன்னேற்றமடைய மாட்டான்.

**ஏகலைவ்யன்:** பாண்டித்யம் படைத்துள்ள பெரியோய், நான் சொல்லுவதைச் சற்று கவனித்துக் கேள். சுவாசிப்பது எப்படித் தற்செயலாய் உயிர்களிடத்தில் அமைந்திருக்கிறதோ அப்படி அண்ணலின் வழிபாடு என்னிடத்துத் தானாக அமைந்திருக்கிறது. அல்லும் பகலும் நான் அதிலேயே ஆழ்ந்து மூழ்கியிருக்கிறேன். சுவாசிப்பதைச் சிறிது நேரம் அடக்கி வைக்கலாம். ஆனால் வழிபாட்டை எக்காரணத்தை முன்னிட்டும் நிறுத்திவிட எனக்கு இயலாது. பிறர் துவக்கித் தராமையினால் இது அனர்த்தமாகப் போய்விடும் என்று இயம்புகிறாயா?

**பிராமணன்:** நீ படைத்திருக்கிற பாங்கு பாராட்டத்தக்கதே. ஆயினும் ஐதிகத்துக்கு உட்பட்டு உபநயனச் சடங்கு சான்றோர் ஒருவரிடமிருந்து ஏற்றுக்கொள்ளுவதே முறை.

**ஏகலைவ்யன்:** அத்தகைய சடங்கு எதையும் நான் ஏற்றவனல்லன். அதை முன்னிட்டு எத்தகைய குறைபாடும் என்னிடத்து அமைந்திருப்பதாகத் தென்படவில்லை. உடல் வளர்ச்சி தானாக நிகழுவது போன்று தேவாராதனையில் ஊக்கமும் என்னிடத்துத் தானாகவே வலுத்து வருகிறது. எனக்கு ஏது குறையுமில்லை.

**பிராமணன்:** நீ நேர்வழியில் போகின்றாய் அல்லது மார்க்கம் மாறிப் போகின்றாய் என்பதை நீ எப்படி அறிந்துகொள்வாய்? அறிஞர் ஒருவர் காட்டித் தந்தால்தானே அது உனக்கு விளங்கும்.

**ஏகலைவ்யன்:** வழிபாட்டில் நான் போகிற போக்கில் குறையோ, குற்றமோ ஏதாவது இருப்பதாக உங்களுக்குத் தெரிந்தால் அதைத் தயவு செய்து எனக்கு எடுத்துக்காட்டி உதவுங்கள்.

**பிராமணன்:** நீ செய்து வருகிற ஆராதனையில் குறை ஏதும் தென்படவில்லை. ஆயினும் ஐதிகத்துக்கு ஒப்ப குருசிஷ்ய பரம்பரையாக ஆராதனை முறைகளைத் தகுதி வாய்ந்த பெரியவர் ஒருவரிடமிருந்து கற்றுக் கையாளுதலே சரியான உபாயம் எனப் பெரியோர்கள் பகருகின்றனர்.

**ஏகலைவ்யன்:** யாரும் புகட்டித்தராது வயது வர வர நடக்க நானே கற்றுக் கொண்டேன். பிறகு நீந்தவும் கற்றுக் கொண்டிருக்கிறேன். இன்ன முறையில் வழிபட்டுவா என்று உள்ளத்தினுள்ளே ஒண் பொருள் ஒன்று இருந்து கொண்டு என்னை ஏவுகிறது. அப்பொருள் காட்டியருளுதற்கேற்ப வழிபாட்டில் நான் ஆழ்ந்து மூழ்குகிறேன். வழிபடும் பொழுது காலம் கடந்து போவது எனக்குத் தென்படுவதில்லை. இடமும் மறைந்துபட்டுப் போகிறது. அக்கம் பக்கமிருக்கும் யாவும் காட்சியினின்று மறைந்து போகின்றன. உள்ளத் தெளிவும் பேரானந்தமும் என்னிடத்தில் வளர்ந்துகொண்டே வருகின்றன. இதில் பிசகு ஏதாவது இருந்தால் தயவுசெய்து எனக்குக் காட்டி உதவுங்கள்.

**பிராமணன்:** இளைஞா நீ செய்துவருகிற வழிபாட்டில் குறை ஒன்றும் தென்படவில்லை. ஜன்மாந்தரத்தில் விட்டகுறை, தொட்டகுறை என்று பல விதமாகப் பகருகிறார்கள். அக்கோட்பாட்டுக்கு ஒப்ப நீ முன்னேற்றம் அடைந்து கொண்டு வருகிறாய். ஐதிகத்தை அனுசரித்து நான் உபநயனம் பெற்று உபாசனை பண்ணி வருகிறேன் எனினும் நீ அடைந்துள்ள பெருநிலையை நான் இன்னும் எட்டவில்லை. தெய்வம் உனக்குச் சகாயம் புரிவாராக. நான் சென்று வருகிறேன்.

(தொடரும்)

# ஸ்ரீ லலிதா வியாக்கியானம்-111

657. युगन्धरा யுகந்தரா—நுகத்தடியைத் தாங்கியிருப்பவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

வண்டியிலோ, கலப்பையிலோ பூட்டப்பட்டிருக்கும் காளைகள் கழுத்தில் நுகத்தடியைத் தாங்கிக்கொண்டிருக்கின்றன. நல்ல கிருத்தியங்களுக்குக் காளைகள் பொறுப்பாளிகள் ஆகின்றன என்பது வெளிப்படை. அன்னை பராசக்தி நுகத்தடியைத் தாங்கியிருப்பது அந்தப் பாங்கில் அன்று. பிரபஞ்ச நடைமுறைகள் அனைத்தும் அம்பிகையின் ஆணையால் நிகழ்ந்து வருகின்றன என்னும் கோட்பாட்டுக்கு ஆகுபெயர் ஆக இருப்பது நுகத்தடி. கால, தேச வர்த்தமானங்களோடு கூடியவளாக அம்பிகை இலங்குகின்றாள். கிருதயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம் ஆகிய நான்கு யுகங்களும் காலத்தின் கூறுகளாகத் திகழுகின்றன. அத்தகைய யுகங்களை முறையாகக் கொண்டு செலுத்துபவள் அம்பிகை. கிழக்கு, மேற்கு, தெற்கு, வடக்கு ஆகிய நான்கு திக்குக்களாகத் தேசம் அல்லது இடம் இலங்குகிறது. இடத்துக்கு ஆதாரமாயிருப்பவளும் அம்பிகையே. நிமித்தம் அல்லது செயல்கள் யாவும் பிரபஞ்சத்துக்கு உரியவைகளாம். பிரபஞ்சமோ கால, தேச, நிமித்தமாகக் காட்சி கொடுக்கிறது. அண்டகோடிகளில் நிகழ்கின்ற கிருத்தியங்கள் அல்லது நிகழ்ச்சிகள் அல்லது நிமித்தங்களுக்கு ஆதரவு கொடுப்பவளாகவும் அம்பிகை இலங்குகின்றாள். இரண்டு காளைகளை ஒன்றாக இணைத்து வைப்பது நுகத்தடி. ஆனால் அந்தப் பாங்கில் சிவமும் சக்தியும் இணைக்கப்பட்டவர்கள் அல்லர். சிவமும், சக்தியும் இணைபிரியாத மூர்த்திகள் என்னும் கோட்பாட்டை நுகத்தடியைத் தாங்கியிருப்பதன் வாயிலாக அம்பிகை விளக்குகிறாள். அக்னியையும், அதில் அமைந்திருக்கும் உஷ்ணத்தையும் பிரிக்கமுடியாது. பாலையும் அதில் மிளிரும் வெண்மை நிறத்தையும் இரண்டாகப் பிரிக்கமுடியாது. அதே விதத்தில் சிவமும் சக்தியும் இணைபிரியாது இருக்கிறார்கள். இக்கோட்பாட்டையும் நுகத்தடியைத் தாங்கியிருப்பதன் வாயிலாக அம்பிகை விளக்கியருள்கின்றாள்.

658. इच्छाशक्ति ज्ञानशक्ति क्रियाशक्ति स्वरूपिणी இச்சாசக்தி, ஞானசக்தி, கிரியாசக்தி ஸ்வரூபிணீ— இச்சை, ஞானம், கிரியை ஆகிய மூன்று சக்திகள் சொருபமாக அம்பிகை இலங்குகிறாள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

பிரபஞ்சத்தில் தோன்றுகிற சரம், அசரம்; சேதனம், அசேதனம் ஆகிய அனைத்தும் இந்த மூன்றுவித சக்திகளாகக் காட்சி கொடுத்துக் கொண்டிருக்கின்றன. இச்சா சக்தி என்பது அன்பு. அன்பு என்னும் சக்தியானது ஜட நிலையில் ஆகர்ஷணம், அல்லது ஈர்ப்புச் சக்தியாக இலங்குகிறது. வெட்ட வெளியில் ஆங்காங்கு அமைந்துள்ள கோளங்கள் ஒன்றை ஒன்று கவர்ந்து இழுக்கின்றன. அந்த ஈர்ப்புச் சக்தியின் விளைவாகவே கோளங்கள் பொருத்தமான இடங்களிலிருந்துகொண்டு முறையாக இயங்கி வருகின்றன. இனி, உயிர்வகைகளுள் அந்தந்த இனம் தன் இனத்தோடு சேர்ந்து இனிது வாழ்ந்து வருகின்றன. பிரிந்திருந்து திண்டாடுவதை இனம் பிரிந்த மானோடு இணைத்து இயம்புவது உலக வழக்கு. உலகெங்குமுள்ள உயிர் வகைகளை ஆராய்ந்து பார்த்தால் ஒவ்வோர் உயிரும் தனது இனத்தோடுகூடி எங்ஙனம் இன்புற்று வாழ்கிறது என்பது வெளியாகிறது. ஒவ்வொரு படித்தரத்திலும் தாய்க்கும் சேய்க்குமுள்ள இணக்கமும் நன்கு வெளியாகிறது. இச்சா சக்தியானது இத்தனை விதங்களில் தன்னை விளக்கிக் கொண்டிருப்பதால் பிரபஞ்ச வாழ்வு இனிது நடைபெற்று வருகிறது.

அடுத்தபடியாக ஒவ்வோர் உயிரும் தன் போக்கில் அறிவை வளர்த்து வருகிறது. அறிவை வளர்க்காத உயிர் பிரபஞ்சத்தில் எங்குமே இல்லை. ஸ்தாவர உலகத்தை ஆராய்ந்து பார்ப்போம். கணக்கற்ற மரம், செடி, கொடிகள் வெளிச்சம் இருக்கும் இடத்துக்குக் கிளைகளை அதிகமாக அனுப்புகின்றன. வெளிச்சமில்லாது இருள் சூழ்ந்து கிடக்கும் திசைகளில் அவைகள் கிளைகளைப் பரப்புவதில்லை. வெளிச்சம் வாழ்க்கைக்கு இன்றி

யமையாத ஆதாரம் என்பதை ஸ்தாவர உலகம் தன்போக்கில் அறிந்துகொள்ளுகிறது. அடுத்த படியாகப் பூமிக்குள்ளே வேர் பரவுதலிலும் இதே கோட்பாட்டைக் காணலாம். சத்து நிறைந்துள்ள மிருதுவான மண்ணில் வேர்கள் அதிகம் பரவுகின்றன. சத்தில்லாத கடினமாயிருக்கும் பக்கங்களில் வேர்கள் அதிகம் பரவுவதில்லை. ஞானசக்தி ஸ்தாவர உலகிலும் நிறைந்திருப்பதற்கு இது சான்று ஆகிறது. இனி எறும்பு வகைகள் பறவைகள் போன்ற சிற்றுயிர்களின் பாங்குகளை ஆராய்ந்து பார்ப்போம். சத்துடைய தானியம், சத்து அற்றது ஆகியவைகளைக் கலக்கி வைத்தால் அவைகள் சத்துடைய உணவை முதலில் ஏற்கின்றன. சத்தற்றதைப் போதாதற்கு ஏற்கின்றன. அவ்வுயிர்களும் அறிவு மயம் என்பதற்கு இது போன்ற சான்றுகள் ஏராளமாக இருக்கின்றன.

விலங்கு இனங்கள் மனிதனுக்கு ஒருபடி கீழே இருக்கின்றன. உணவைத் தேடுதலிலும் பொருத்தமான இடங்களில் வசிப்பதிலும் நோயைத் தடுப்பதிலும் எதிரிகளிடத்திலிருந்து தங்களைக் காப்பாற்றிக் கொள்ளுதலிலும் கிட்டத்தட்ட மனிதனுக்கு நிகராக விலங்குகள் நடந்து கொள்ளுகின்றன. சில வேளைகளில் மனிதன் படைத்துள்ள அறிவு விலங்குகளின் அறிவுக்குக் கிட்ட வரமாட்டாது. ஆக உயிர்களனைத்திடத்தும் அம்பிகையின் ஞானசக்தி பல படித்தரங்களில் அமைந்திருப்பது வெளிப்படை.

அடுத்தபடியாக கிரியா சக்தியை ஆராய்ந்து பார்ப்போம். உயிர்களனைத்தும் பலப்பல படித்தரங்களில் கர்மத்தில் ஈடுபட்டிருக்கின்றன. அவைகள் ஏன் அப்படிச் செய்கின்றன என்று துருவி ஆராய்ந்து பார்க்கவேண்டும். உயிர்ப்பற்று ஜந்துக்கள் அனைத்திடத்தும் இருக்கின்றது. சாவு அல்லது மரணத்துக்கு அவை யாவும் அஞ்சுகின்றன. மரணத்தைத் தவிர்க்கவும் உயிர் வாழ்க்கையை உறுதிப்படுத்தவும் அவைகள் அல்லும் பகலும் முயன்று வருகின்றன. எனவே ஜீவ ஜந்துக்கள் யாவும் கிரியா சக்தி சொருபமாக இலங்குகின்றன.

இனி, மனிதனிடத்துத் தனிச் சிறப்பு ஒன்று உண்டு. மனிதன் யாரை நேசிக்கின்றானோ அவனுக்காக அவன் தயங்காது ஓயாது உழைக்கின்றான். இச்சை அல்லது அன்பினால் தூண்டப்பட்ட வினை இனிது நிறைவேறுகிறது. மனிதன் எதை உயர்ந்தது என்று அறிந்துகொள்ளுகிறானோ அதை அவன் ஊக்கத்தோடு நாடுகிறான். அதை அடையப் பெறுவதற்காக அரிய பெரிய திட்டங்களை அமைத்துக் கொள்ளுகின்றான். ஆக, மனிதனிடத்து நிகழ்கின்ற கிரியா சக்திக்குத் தூண்டுதல் பெரிதும் இச்சா சக்தியினிடத்திருந்தும், ஞானசக்தியினிடத்திருந்தும் வருகிறது.

அம்பிகை படைத்துள்ள இச்சாசக்தி, ஞான சக்தி, கிரியாசக்தி சொருபத்தில் மற்றொரு தத்துவம் அமைந்திருக்கிறது. உயிர் வகைகள் புரிகின்ற கர்மங்களனைத்தும் மரணத்தைத் தவிர்க்கவும், நல்வாழ்வை நிலை நாட்டுதற்கும் நிகழ்கின்றன. அச்சத்தினின்று விலகி சத் சொருபத்தை அடைய உடல் எடுத்துள்ள ஜீவாத்மாக்களனைத்தும் முயன்று வருகின்றன. சத் சொருபத்தை நிலைநாட்டுதல் அவைகளின் குறிக்கோள். வாழ்வைப் பலப்படுத்துவதற்கான அறிவை வளர்ப்பதில் அவை யாவும் கண்ணும் கருத்துமாயிருக்கின்றன. அக்ஞானத்தைத் தவிர்த்து ஞானத்தைப் பெருக்குவது அவைகளின் நாட்டம். சித் சொருபத்தை எட்ட வெவ்வேறு முறைகளில் அவையாவும் முயன்று வருகின்றன என்பது வெளிப்படை. இச்சாசக்தி அன்பாக மிளிர்கிறது. அன்பினின்று ஆனந்தம் உருவெடுக்கிறது. ஆனந்தத்தை அடைய உயிர்வாழ்வன யாவும் அல்லும் பகலும் முயன்று வருகின்றன. இந்த மூன்று முயற்சிகளைத் தொகுத்தெடுத்தால் அவைகள் சத்-சித்-ஆனந்தம் ஆகத் திகழ்கின்றன. இது ஆத்ம சொருபம். அம்பிகை தானே சத் சித் ஆனந்த சொருபமாக மிளிர்கின்றாள். இந்தச் சத் சித் ஆனந்தத்தையே ஜீவகோடிகளனைத்திடத்தும் பாகுபடுத்தி வைத்திருக்கிறாள். அவை யாவும் சச்சிதானந்தத்தைப் பெறவே யாண்டும் முயன்று வருகின்றன. ஆக இந்த நாமத்தின் வாயிலாக அம்பிகை தன்னுடைய நிஜசொருபத்தை உயிர்களனைத்திடத்தும் அமைத்து வைத்து அந்தச் சொருபத்தில் நிலைபெற்றிருந்து தூண்டுதல் போடுகின்றாள் என்பது வெளியாகிறது.

# ஸத் ஸம்பாஷணை

**கேள்வி: (156) தாயின் தலையைக் கொய்து வரச் சொன்னார் பரசுராமனின் தந்தை. அவரும் அப்படியே செய்தார். இது பொருந்துமா ?**

பரசுராமனின் தந்தை ஜமதக்னி. தந்தை, மைந்தன் ஆகிய இருவரும் மிகக் கண்டிப்பான மூர்த்திகள். முன்கோபிகள். தயவுதாட்சண்ய மின்றி எண்ணியதை எண்ணியாங்கு செய்து முடிக்க வல்லவர்கள் என்பது புராண ஐதிகம். இத்தகைய தந்தையும், மைந்தனும் சரித்திர பூர்வமான மூர்த்திகள் அல்லர். புராணக் கற்பனை மூர்த்திகளாக இலங்கி வருகிறார்கள். ஜமதக்னியின் மனைவியும் ப்ரசுராமனுடைய தாயும் ஆகிய மாதரசி கற்பின் உச்சநிலையை எட்டியவள். அவள் நாள்தோறும் நதிக்குச் சென்று நீராடுவாள். பிறகு நதியிலுள்ள மணலைக்கொண்டு ஒரு கணப்பொழுதில் குடம் ஒன்றை அமைப்பாள். அதில் நிறைகுடம் நீரெடுத்துக்கொண்டு கணவனுடைய வழிபாட்டுக்காகக் கொண்டுவந்து சேர்ப்பாள். இது நெடுநாளாக நிகழ்ந்து வந்த நிகழ்ச்சியாகும். ஒருநாள் அவள் நீராடிக்கொண்டிருக்கும் பொழுது வானவெளியில் ஓர் அசாதாரணமான காட்சியைக் கண்டாள். வானத்தில் மிக உயரத்தில் கந்தர்வ ஆடவன் மகளிர் ஆகிய இருவர் புணர்ந்துகொண்டிருந்தது அவள் கண்ட காட்சி. தானும் தன் கணவனோடு அங்ஙனம் புணரவேண்டும் என்னும் எண்ணம் அவள் உள்ளத்தில் உதித்தது. அதன் பிறகு மணல் குடம் அமைக்க முயன்றாள். ஆனால் அது அமையவில்லை. அவள் எடுத்துக்கொண்ட பெரு முயற்சி பயன்படாது போயிற்று. பெரிய ஏமாற்றம் அடைந்தாள். சீலம் அவ்வளவு கடினமானது. கணவனாகிய ஜமதக்னி தன் பூஜைக்காகத் தீர்த்தம் வந்துசேரவேண்டுமென்று ஆவலோடு காத்திருந்தார். மனைவி வெறும்கையோடு வருவதைப் பார்த்தார். அவருக்குக் கோபம் மூண்டது. நான்கு புதல்வர்கள் அவருக்கு இருந்தார்கள். தாயைக்கொல்லும்படி முதல் புதல்வனுக்கு ஆணையிட்டார். கொல்ல அவன் மறுத்தான். அந்தப் புதல்வன் சாகக்கடவது என்று அவர் சபித்தார். அக்கணமே அவன் மடிந்து விழ்ந்தான். அதே ஆணையை இரண்டாவது மகனுக்கு இட்டார். அவனும் தாயைக் கொல்ல மறுத்தான். இரண்டாவது மகன் சாகக் கடவது என்று தந்தை சபித்தார். அவனும் மடிந்து விழ்ந்தான். அதே கதி மூன்றாவது மைந்தனுக்கும்நிகழ்வதாயிற்று. நான்காவது மைந்தன் பரசுராமன். தாயைக் கொல் என்று தந்தை ஜமதக்னி உத்தரவு போட்டார். மைந்தனாகிய பரசுராமனும் தந்தையின் உத்திரவுப்படி தன்கையிலிருந்த பரசு அல்லதுகோடாரியைக் கொண்டு தாயின் கழுத்தை வெட்டித் தள்ளினான். கழுத்துத் துண்டிக்கப் பட்ட, தாய் மடிந்து வீழ்ந்தாள். ஜமதக்னிக்கு மைந்தனாகிய பரசுராமனிடம் மகிழ்வு மிக உண்டாயிற்று. ‘தந்தை சொற்படி நடக்கும் பாங்குடைய உன்னைப் பாராட்டுகிறேன். ஒரு வரம் கேள். அதைத் தருகிறேன்’ என்றார். பரசுராமன் அக்கணமே வரம் ஒன்று கேட்டார். அதில் அவருடைய தரம் வெளியாகிறது. ‘என் தாயும் தமையன்மார்களும் உயிர் பெற்று எழுந்திருக்கும்படி வரம் தாருங்கள்’ என்றார். அங்ஙனமே தந்தை வரம் கொடுத்தார். மாண்டுபோன நால்வரும் உயிர்பெற்று எழுந்தார்கள், இதுவே பரசுராமன் தந்தையின் ஆணைப்படி தாயைக் கொன்ற வரலாறு. இது ஒரு புராண ஐதிகம். நல்லது ஆனாலும் சரி கெட்டது ஆனாலும் சரி தாய் தந்தையர் உத்திரவுப்படி நடந்துகொள்ளுகிற மைந்தனுக்கு அலாதியான தெய்விக ஆற்றல் வருகிறது என்பது கோட்பாடு. பரசுராமன் அதற்குச் சான்று.

**கேள்வி: (157) தேவர்களுக்குப் படையாது உண்பவன் திருடன் ஆகிறான் என்று கீதையில் மூன்றாவது அத்தியாயம் பன்னிரண்டாம் சுலோகத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. தனக்காகவென்று நெற்றி வியர்வை நிலத்தில்விழப் பாடுபட்டுச் சம்பாதித்து உண்பவன் எப்படித் திருடனாவான் ?**

மக்களுள் மூன்று தரத்தார் இருக்கின்றனர். கடைத்தரத்தில் உள்ள மனிதன் சுயநலமே வடிவெடுத்தவன். தனக்காகவென்றே அவன்

பாடுபடுகின்ருன், சம்பாதிக்கின்ருன். சம்பாதித்த செல்வத்தைத் தானே வைத்து அனுபவிக்கின்ருன். பிறருக்குப் பங்கிட்டுக் கொடுக்க அவன் ஒருபொழுதும் இசைபவன் அல்லன். அவனுடைய பண்பாட்டுக்கேற்ற நீதி அது. அதில் தீங்கு ஒன்றுமில்லை. ஆயினும் அவனுடைய முன்னேற்றம் பெரிதும் தடைப்பட்டே இருக்கும். அவனுக்கு மேல் இடைத்தரத்திலிருக்கும் மனிதன் சுயநலமே வடிவெடுத்து இருந்தாலும் தன்னுடைய சுகபோகத்துக்குப் பங்கம் வராது ஏதோ ஓர் சிறிதளவு பிறர்க்கு உபகாரம் செய்கிருன். இந்த இரண்டாம் தர மனிதன், மூன்ரும் தர மனிதனைவிட மேலானவன். அதற்கேற்றவாறு அவனுடைய முன்னேற்றமும் வந்தமையும். பின்பு தலைத்தரமான மனிதனே தனக்கென வாழாது பிறர்க்கென்றே வாழும் பாங்குடையவனுகின்ருன். 'யான் எனது என்னும் செருக் கறுப்பான் வானோர்க்கும் உயர்ந்த உலகம் புகும்' என்னும் கோட்பாட்டுக்கு அவன் இலக்காகின்ருன். அவன் உயிர் வாழ்ந்திருப்பது தனக்காகவென்று அன்று. அன்னவன் உழைப்பதும் சுயநலத்தால் தூண்டப்பட்டு அன்று. தன்னுடைய ஜீவிதத்தையே தெய்வத்துக்கும் உயிர்களுக்கும் அர்ப்பணமாக அவன் படைக்கிருன். தன்னைப்பற்றி நினைக்க அவனுக்கு நேரமில்லை. அதனல் அவன் அடைகின்ற ஊதியம் ஒப்பு உயர்வு அற்றது. தெய்வாதீனமாக அவன் ஆதரிக்கப்பெறுகிருன், காப்பாற்றப் பெறுகிருன். அவன் படைத்துள்ள பரந்த மனப்பான்மையின் விளைவாகப் பரம் பொருளில் ஒன்றுபட அவன் தகுதியுடையவன் ஆகின்ருன். எவ்வளவுக்கெவ்வளவு ஒரு மனிதன் தனது ஜீவிதத்தையும், உழைப்பையும் பொதுநலனுக்காக ஒப்படைக்கிருனே அவ்வளவுக்கவ்வளவு மேன்மையுறுகிருன் என்பது வாழ்க்கையின் மேலாம் கோட்பாடு. நசிகேதன் என்னும் ரிஷிபுத்திரன் ஒருவன் இருந்தான். அவனுடைய ஜீவிதம் ஆரம்ப தசையில் தந்தைக்காகவென்று தியாகம் பண்ணுகிற பாங்கில் துவங்குகிறது. அவனுடைய தியாக புத்தி படிப்படியாக மேல்நிலைக்குப் போய் தன்னுடைய ஜீவிதத்தையே பரத்துக்கு உரியதாக ஒப்படைக்கிருன். விசுவஜித் யக்ஞம் பண்ண முயன்ற தந்தையிடம் சிறிது சுயநலப்பற்று இருந்தது. தம்மிடம் இருந்த செல்வம் அனைத்தையும் பிறர்க்காக எடுத்து வழங்க அவர் கடமைப்பட்டிருந்தார். ஆனல் நல்லவைகளையெல்லாம் அவர் தமக்காகவென்று வைத்துக்கொண்டு பயனற்றவைகளை யெல்லாம் பிறர்க்கெடுத்து வழங்க ஆரம்பித்தார். அவர் செயலில் இருந்த பிசகை மைந்தன் நசிகேதன் அறிந்துகொண்டான். தன்னை யாருக்குத் தானமாக எடுத்து வழங்கப் போகிருர் என்று தந்தையிடம் கேட்டான். தந்தையிடமிருந்த குறை நிலையை நிறை நிலையாக்குவது அவனுடைய நோக்கம். அவனிடம் கோபித்துக்கொண்ட தந்தை 'உன்னை எமனுக்குப் பிடித்துத் தருவேன்' என்று விரட்டினர். தந்தையைச் சத்திய சங்கல்பன் ஆக்குதல் பொருட்டு மைந்தன் யமலோகத்துக்குப் போனுன். யமதர்மராஜனைக் காண்பதற்காக அவன் ஆங்கு மூன்று நாள் பட்டினி கிடந்தான். அதற்கு ஈடாக மூன்று வரம் தர எமதர்மராஜன் முன் வந்தான். நசிகேதன் கேட்ட மூன்று வரத்திலும் சுயநலத்தின் அறிகுறி சிறிதேனும் தென்படவில்லை. தன்னைக் கோபித்துக் கொண்ட தந்தை அமைதியுற்றிருந்து தன்னை மீண்டும் மகிழ்ச்சியோடு ஏற்றுக் கொள்ள வேண்டும் என்பது அவன் கேட்ட முதல் வரம். எத்தகைய யாகம் அல்லது முயற்சியைக் கையாண்டால் மானுடனெருவன் இம்மை மறுமையாகிய இருமையிலும் விரும்பியதையெல்லாம் பெறலாம் என்பது அவன் கேட்ட இரண்டாம் வரம். ஆத்ம தத்துவத்தைப் பற்றி வினவியது அவனுடைய மூன்ருவது வரம். ஆத்ம தத்துவத்தைப் புகட்டுவதற்குப் பதிலாக ஏதேதோ சம்பத்துக்களைத் தருவதாக யமதர்மராஜன் ஆசையூட்டினன். சுய முயற்சியால் தான் அவைகளைப் பெற முடியும். ஆனல் அவைகளில் அவனுக்கு ஆசையில்லை என்றும், பரதத்துவம் ஒன்றே உலகுக்குப் பயன்படும் என்றும் நசிகேதன் சொன்னது யமதர்மராஜனுக்குப் பெருவியப்பு ஊட்டியது. தியாக மூர்த்தியாயிருந்து நசிகேதன் மனிதன் பெறவேண்டிய பேறுகளனைத்தையும் பெறலானுன். சுயநலம் வாழ்க்கையின் குறிக்கோளன்று; தியாகமே வாழ்க்கையின் குறிக்கோள்.

# மரணசிந்தனை சிறந்தசாதனை

(சுவாமி ஆத்மானந்தர்)

"காயநிலை அல்லவென்று காண்பார்
உறங்குவரோ
தூயஅருட் பற்றுத் தொடர்வார் பராபரமே"

என்பது தாயுமானவர் திருவாக்கு. ஆத்ம சாதகனொருவன் மானுடவாழ்வின் நிலையாமையைப்பற்றி அடிக்கடி சிந்திக்கவேண்டும். நிலையாமையைச் சிந்திக்கின்ற அளவிற்கு உடற்பற்றும், உலகப் பற்றும் குறைகின்றன. நீ எந்த க்ஷணத்திலும் இவ்வுலகைவிட்டுப் போக நேரிடலாம். நாளை இருப்பாய் என்பதற்கு எந்தவிதமான உத்தரவாதமும் இல்லை.

"நெருநல் உளனொருவன் இன்றில்லை என்னும்
பெருமை உடைத்துஇவ் வுலகு"

என்பது பொய்யாமொழி. இறையருளுக்குப் பாத்திரமாக இன்று முதலே முயற்சி செய். நாளைக்குப் பார்க்கலாம் என்றோ வயதான பின் பார்க்கலாமென்றோ ஒத்திப் போடாதே. "இன்றைக்கு இருப்பாரை நாளைக்கிருப்பாரென்று எண்ணவோ திடமில்லையே" என்பதை மறந்துவிடாதே. இன்று திடகாத்திரத்துடன் இருப்பவன் நாளை திடீரென்று மறைந்து போய்விடலாம். மறைந்து சில நாட்களுள் அவனை நினைப்பாரே இல்லாமற் போய்விடலாம். மனிதன் நிகழ்காலத்தைக் காணுகின்றானே தவிர எதிர்காலத்தைநோக்குவதில்லை. நிகழ்காலத்தை நினைப்பதோடு எதிர்காலத்தையும் நினைக்கவேண்டும். வாழ்வை நினைப்பதோடு சாவையும் நினைக்கவேண்டும். மரணத்தை எப்போதும் தன் கண்முன் நிறுத்திக்கொண்டிருக்க வேண்டும். பக்தியும், பரிசுத்த மனதும் படைத்தவன் மரணத்தைக் கண்டு அஞ்சமாட்டான். சிவபெருமான் காலகாலன் என்றழைக்கப்படுகின்றார். காலனுக்கே காலனாக இருப்பவர் சிவபெருமான். அவரது அருளுக்குப் பாத்திரரானோர் யமனைக் கண்டு அஞ்சவேண்டியதில்லை. சிவனது அருளுக்குப் பாத்திரரான அப்பர் "நாமார்க்கும் குடியல்லோம்; நமனை அஞ்சோம்" என்றார். தாயுமானவரும்,

"மார்க்கண்டர்க் காக மறலிபட்ட பாட்டை
உன்னிப்
பார்க்கின் அன்பர்க்கென்ன பயங்காண்
பராபரமே"

என்று பாடுகின்றார்.

மரணத்தினின்று யாரும் தப்பித்துவிட முடியாது. தோன்றிய உடல் ஒருநாள் அழிந்து தான் போகும். உடலின் அழிவைத்தான் மரணம் என்கிறோம். உடலின் அழிவை யாராலும் தடுத்து நிறுத்திவிட முடியாது. சாதகன் மரணத்தினின்று தப்பிக்க முயல்வதைவிட மரண பயத்தினின்று விடுபட முயலவேண்டும். உடலின் அழிவை நினைவில் வைத்துக்கொண்டு உயர்ந்த வாழ்வு வாழ முயலவேண்டும். அநித்திய உடல் வாழ்வைப் பயன்படுத்தி நித்தியப் பெருவாழ்வில் ஈடுபடவேண்டும். கீழ்த்தரமான செயல்களில் ஈடுபடாது உலகுக்குப் பயன்படுகின்ற நற்செயல்களை ஓயாது இயற்றிவர வேண்டும். இன்றே மரணபயத்தை ஒழித்துவிடு. அஞ்சுபவன் அல்லது கோழை உள்ளம் படைத்தவன் அனுதினமும் சாகிறான். வீரனோ ஒரே ஒருமுறைதான் சாகிறான். வாழ்வில் ஒருமுறை வருகின்ற சாவுக்காக அனுதினமும் நாம் ஏன் சாகவேண்டும்? சாவு என்று வரும் என்பது நமக்குத்தெரியாது. என்றோவருகின்ற சாவைக் குறித்து இன்றே வருந்துவானேன்? சாவு இன்று வரினும் சரி, நாளைவரினும் சரி, என்றோவரினும் சரி அது குறித்து நாம் அஞ்சவேண்டியதில்லை. நாளைக்கென்று எந்த நற்செயலையும் ஒத்திப்போடாதே. அன்றன்று செய்யவேண்டியவைகளை அன்றே செய்து முடித்துவிடு. ஆத்மீக முன்னேற்றத்துக்கான காரியங்களை அவ்வப்போதே செய்து முடி. வழிபாட்டிற்கு முதலிடம் தந்து ஏனையவற்றிற்கு அடுத்த இடங்களை ஒதுக்கிவைப்பாயாக.

உலகில் வாழ்கின்ற நாம் கர்மங்களை ஒதுக்கிவிட முடியாது. கர்மம் செய்வதற்காகத்தான் இங்கு வந்திருக்கின்றோம். கர்மம் புரிதல் கடவுள் வழிபாட்டிற்கு இடையூறு என்று சிலர் கருதுகின்றனர். கர்மம் இறைவழிபாட்டிற்கோ, சாதனத்துக்கோ இடையூறன்று. இடையறாது கர்மம் செய்வதற்கிடையில் கடவுள் சிந்தனையை மட்டும் விட்டு விடா

காது. செய்யும் செயல்களை யெல்லாம் ஈசுவர ஆராதனையாகச் செய்து வந்தால் கர்மம் நம்மைப் பந்தப்படுத்தாது. எல்லாரும் கர்மம் செய்துதான் ஆகவேண்டும். கர்மத்தைச் சுய நலத்தோடு செய்யுங்கால் அது நம்மைப் பந்தப்படுத்தும். சுய நலத்தை ஒதுக்கி வைத்துவிட்டுக் கர்மங்களைத் தெய்வத் தொண்டாகச் செய்து வந்தால் கர்மம் நம்மைப் பந்தப்படுத்தாது. தெய்வத்துக்கென்றுசெய்யும் தொண்டே கர்மயோகமாகிறது. வாழ்வையே தெய்வத்துக்கென்று ஒப்படைத்துச் செயல்களனைத்தையும் தெய்வத்தொண்டாக இயற்றுபவரே தொண்டர்களாகிறார்கள். அத்தகைய திருத்தொண்டர்கள் கடவுள் சிந்தனையைக் கணப்பொழுதும் விடுவதில்லை. நலம்கேடு, குளிர் வெப்பம், புகழ்ச்சி இகழ்ச்சி ஆகிய இருமைகள் அனைத்திலும் அன்னவர் இறைச் சிந்தனையை மட்டும் விட்டு விடுவதில்லை. "நெஞ்சம் உமக்கே இடமாக வைத்தேன்; நினையாது ஒருபோதும் இருந்தறியேன்" என்ற கோட்பாட்டிற்கு அவர்களுடைய வாழ்வு விளக்கமாக இருக்கின்றது. அத்தகைய பெருநிலையை அடைய நாமும் முயலவேண்டும்.

நீண்ட நாட்கள் வாழ்ந்திருப்பதனால் பயனேதும் இல்லை. மரங்களில் சில ஆயிரக்கணக்கான ஆண்டுகள் வாழ்ந்திருக்கின்றன. ஆயினும் அவை மரங்களாகவே இருக்கின்றன. மக்களுள் பெரும்பாலோர் ஐம்பது வயதுக்குமேல் வாழ்ந்திருக்கின்றனர். நெடுநாள் வாழ்ந்திருந்தால் மட்டும் போதாது; அதற்கேற்ற முன்னேற்றம் இருக்கிறதா என்பதைப் பார்க்க வேண்டும். சிறிது காலம் வாழ்ந்தாலும் திருந்திய செம்மையான வாழ்வு வாழவேண்டும். நெடுநாட்கள் வாழ்ந்திருந்து கர்ம மூட்டையைப் பெரிதுபடுத்திக் கொள்ளுவதை விடச் சிறிது நாட்கள் வாழ்ந்திருந்து கர்ம மூட்டையைச் சுருக்குவது மேலானதாகும். ஒருநாள் வாழ்ந்தாலும் அது பெருவாழ்வாக இருக்கட்டும். சிறுமையுற்று நெடுநாள் வாழ்ந்திருத்தல் தகாது. வயது முதிர்கின்ற அளவிற்கு மாந்தர் பண்பில் முன்னேற்றமடைகின்றனரா என்றால் இல்லை யென்றுதான் சொல்லவேண்டும். உடல் வளர்ச்சியில் கவனம் செலுத்துகின்ற அளவிற்கு ஆன்மிக வளர்ச்சியில் கருத்துச் செலுத்துகின்றோமா என்றால் இல்லை யென்றுதான் கூறவேண்டும். உடல் வளர்ச்சியினும் ஆன்ம வளர்ச்சிக்கு முக்கிய இடம் தரவேண்டும். நாட்டிலுள்ள சந்நியாசிகளுள் பெரும்பாலோர் வெறும் டாம்பீக வாழ்வில் பற்றும், சாப்பாட்டுப் பிரியர்களாகவும் இருக்கின்றார்கள். புகழையும், மக்களது பாராட்டுதலையும், மாலைகளையும் விரும்புபவர்களாக இருக்கின்றனர். உயர்ந்த லக்ஷியத்தை நாடித் துறவை மேற்கொண்டோர் ஒரு சிலர்தான். அவர்கள்தான் இந்நாட்டின் முதுகெலும்பு போன்றவர்கள். அவர்களால் தான் இன்று பாரதம் இந்த அளவிற்காவது பரநாட்டம் கொண்டதாய் இருக்கின்றது. உண்மைத் துறவிகளின் கூட்டம் பெருகவேண்டும். துறவியர் கூட்டம் பெருகின்ற அளவுதான் நாடுமுழுதும் பாரமார்த்திக அலை வீசத் தொடங்கும். அப்பொழுதுதான் நாட்டில் அருளாட்சி ஏற்படும். நாட்டை இன்று பொருளும் போகமும்தான் ஆட்சி செய்கின்றன. இந்நிலை மாறவேண்டும். அருளும் அறமும் ஆட்சி செய்யவேண்டும். அருளிலும், அறத்திலும் பற்றுடையோர்; தர்மத்திலும் சத்தியத்திலும் நம்பிக்கையுடையோர் ஆட்சிக்கு வரவேண்டும். அதுதான் காந்திஜி விரும்பிய ராமராஜ்யம். பண்டைக்காலத்தில் அத்தகைய ஆட்சி பாரதத்தில் இருந்தது. இன்று அது பழங்கதையாய்க் கனவாய்ப் போய்விட்டது. இனி அந்த நல்லாட்சி என்று வருமோ யார் அறிவார்? மக்கள் எவ்வளவுக் கெவ்வளவு பாரமார்த்திக வாழ்வில் ஈடுபடுகின்றார்களோ அந்த அளவிற்கு அருளாளர் கூட்டம் நாட்டில் அதிகரிக்கும். அருளாளர் திருக்கூட்டம் அதிகமாகின்ற அளவிற்கு அருளாட்சி வந்தமையும். நாடும், உலகமும், மக்களும் முன்னேற்றமடைய அருள்நாட்டம் ஒன்றுதான் உற்ற உபாயமாகும். நாளும் நாளும் நம்மிடம் அருள் நாட்டம் பெருகி வரவேண்டும்.

மரணத்தைப் பயங்கரமான செயலெனப் பலர் கருதுகின்றனர். உண்மையில் பார்க்கப் போனால் பிறத்தலும் பயங்கரமான செயல் என்பதில் ஐயமில்லை. பிறத்தல் பயங்கரமானதென்று மக்கள் கருதுவதே இல்லை. மரணத்

தைக் கண்டு அஞ்சுவதைப் போல பிறப்பைப் பார்த்து யாரும் அஞ்சுவதில்லை. குழந்தை இறந்தால் அழுகின்றோம்; பிறந்தால் சிரிக்கின்றோம். பிறப்பையும் இறப்பையும் பயங்கரமானதாகக் கருதுகின்றவன், குழந்தை பிறந்தால் சிரிக்கமாட்டான்; அது இறந்துவிட்டால் அழவுமாட்டான். பிறத்தலும் இறத்தலும் நாணயத்தின் இரண்டு பக்கங்களைப் போன்றது. அது குறித்துச் சிரிக்கவோ அழவோ வேண்டிய அவசியமில்லை. 'பிரசவ வேதனை என்பது கருப்பையிலிருந்து வெளி வருகின்ற எல்லா உயிர்களுக்கும் ஒன்றாகத்தான் இருக்கும். ஆனால், மரண வேதனை என்பது பிறப்பைப் போன்று எல்லா உயிர்களுக்கும் ஒன்றாக இராது. மனிதன் அடைந்துள்ள மனபரிபாகத்திற்கேற்ப மரண வேதனை கூடவோ குறையவோ இருக்கலாம். பண்படாத மனிதன் மரணத்தைக் கண்டு அஞ்சுகிறான். தன்னை நாடிவருகின்ற மரணத்தை வேதனையோடு தழுவிக் கொள்கிறான். ஆனால் சான்றோன் மரணத்தைக் கண்டு அஞ்சுவதில்லை. மரணம் பயங்கரமானதென்றும், வெறுக்கத் தக்கதென்றும் அவன் எண்ணுவதில்லை. நாள்தோறும் இரவில் உறங்கச் சென்று மறுநாட்காலையில் எழுந்துவிடுகின்றோம். மரணம் என்பது நீண்ட உறக்கம். உறக்கத்தை நாம் எவ்வளவு மகிழ்வோடு வரவேற்கின்றோமோ, அதே போன்று சான்றோர் மரணத்தை மகிழ்வோடு வரவேற்கின்றனர். மரணத்தை அழுதுகொண்டு தழுவுபவன் அஞ்ஞானி. சிரித்துக்கொண்டு வரவேற்பவனே ஞானியாவான். அழுதுகொண்டு பிறப்பது மனிதக் குழந்தைகள் அனைத்துக்கும் பொது. அதே போன்று சிரித்துக்கொண்டு சாவது சான்றோர் அனைவர்க்கும்பொதுவாகும். நாம் அஞ்ஞானத்துடன் பிறந்திருக்கலாம்; அதில் குற்றமொன்றுமில்லை. ஆனால் அஞ்ஞானியாகவே சாக முயலலாகாது. ஞானியாவது நமது வாழ்வின் லக்ஷியமாக வேண்டும்.

மனிதன் தன்னைப்பற்றிக் கவலைப்படுவதைவிட உற்றார் உறவினர்களைப்பற்றியும், பெண்டு பிள்ளைகளைப்பற்றியும் அதிகம் கவலைகொள்ளுகிறான். நான் இல்லையென்றால் இவர்கள் என்ன ஆவார்கள்? இவர்களையெல்லாம் யார் கவனிப்பார்கள்? இவர்கள் அனாதைகளாகத் திரிவார்களே என்று அஞ்சுகிறான். இது மனிதவர்க்கத்தினிடத்துள்ள மிகப் பெரிய சாபக்கேடு. மற்றவுயிர்களிடத்து இத்தகைய சாபக்கேடில்லை. பந்தபாசம் மனிதவர்க்கத்தினிடத்து அவ்வளவு தூரம் ஊறிக்கிடக்கின்றது. கன்றுக்காகப் பசு புல் பிடுங்கி வைத்துவிட்டுச் சாவதில்லை; குஞ்சுக்காகக் கோழி இரைதேடி வைத்துவிட்டுப் போவதில்லை. ஆனால் மனிதனே தன் பெண்டு பிள்ளைகளுக்கும், பேரன் கொள்ளுப் பேரர்களுக்கும், உற்றார் உறவினர்களுக்கும் தேவையானதைத் தேடி வைத்துவிட்டுப் போக முயலுகிறான். இம்மையில் ஈட்டுகின்ற செல்வத்தை மறுமைக்கும்கொண்டு செல்லலாம் என்றிருந்தால், ஒவ்வொரு மனிதனும் அதற்கும் சேர்த்துப் பொருளீட்டத் தொடங்கிவிடுவான். நல்லவேளை, பொருள் மறுமைக்குப் பயன்படவே படாது என்ற நிலை இருக்கிறது. பொருட்செல்வம் இம்மையோடு நின்றுவிடும். அருட்செல்வமோ இம்மை மறுமை இரண்டிற்குமே பயன்படக்கூடியதாகும். ஆதலால் அருளைத் தேடத்தான் முயலவேண்டும். புத்திரர்களைப் பொருள்தான் காப்பாற்றும் என்று கருதாதே. பொருளின்மீது நம்பிக்கை வைப்பதைவிடக் கடவுள்மீது நம்பிக்கை வைக்குமாறுதூண்டவேண்டும். பொருளைப் பெருக்குவதைவிட அருளைப் பெருக்க வேண்டும். அருட்செல்வத்தை முதலில் தேடு. பின்னர் பொருட்செல்வத்தைத் தேடு. இதற்கு மாறாகச் செய்யலாகாது. இதைத்தான் பகவான் ராமகிருஷ்ணர் "முதலில் ஈசுவரனைத் தேடு; அதன் பின்னர் உலகப்பொருட்களைத் தேடலாம்" என்று கூறியுள்ளார். உனது இதயத்தில் ஈசனுக்கு முதலிடம்கொடு; உலகப்பொருட்களுக்கு இரண்டாவது இடத்தைக் கொடு. அப்போது கேடு ஒன்றும் உன்னை வந்தடையாது. பொருள் சேரச்சேர மனிதனுக்கு அருள் நாட்டம் குறைந்து விடுகிறது. துன்பதுயரங்கள் மனக்கவலைகள் அதிகரிக்கின்றன. மனஅமைதி அடியோடு அழிந்துவிடுகிறது. இரவில் உறக்கமும் அவனைவிட்டு ஓடிவிடுகிறது. உறக்க மாத்திரையின்றி அவனால் உறங்கமுடிவதில்லை. ஆனால் ஏழைகளுக்கு வயிற்றுக்குச் சோறில்லையே என்கிற கவலையைத் தவிர வேறுகவலையில்லை. ஏழை

மனக்கோட்டை எதுவும் கட்டுவதில்லை. அவனுக்கு உறக்கம் வரவில்லையே என்கிற கவலையில்லை. உடலைக் கீழே சாய்க்கவேண்டியது தான், உடனே உறக்கம் வந்து அவனைத் தழுவிக்கொள்கின்றது. உலகத்தை மறந்து ஆழ்ந்த உறக்கத்தில் அவன் பரமானந்தத்தின் சாயலை அனுபவிக்கின்றான். ஆனால் செல்வந்தனுக்கோ இந்தப் பெரும் பாக்கியம் கிட்டுவதேயில்லை. ஆழ்ந்த உறக்கம் என்பது அவனுக்குக் குதிரைக் கொம்பாகப் போய்விடுகிறது. இத்தகைய நிலையைப் பெறுதற்கரியது என்று பெருமைப்படுவதா அல்லது பரிதாபகரமானதென்று அனுதாபம் கொள்வதா? அனுதாபம் கொள்வதைத் தவிர இதில் பெருமைப்படுவதற்கு ஒன்றுமில்லை என்று நிச்சயம் கூறலாம்.

இந்த ஊனுடலை ஓம்புவதுதான் வாழ்க்கை என்று எண்ணிவிடாதே. உடலைப் பேணுவது மட்டும் மானுடவாழ்வன்று. அது விலங்குகளின் வாழ்வாகிவிடும். உடலைப் பேணுதற்கிடையில் உள்ளத்தைப் பேணுவதிலும் கருத்துச் செலுத்தவேண்டும். உடலைப் பேணுவதைவிட உள்ளத்தைப் பேணுதற்கு முக்கியத்துவம் அளிக்கவேண்டும். தன்னைப் பக்குவப்படுத்துதற்கே மனிதன் தனது வாழ்வைப் பயன்படுத்த வேண்டும். உலகப்பற்றையும், ஆசாபாசங்களையும் உள்ளத்திலிருந்து அகற்றும் அளவிற்கு மனம் பக்குவமடைகிறது. எல்லாத் தீமைகளுக்கும் உறைவிடமாய் இருப்பது காமமும் காசு ஆசையும் தான். காமத்தையும், காசு ஆசையையும் போன்றே கோபமும் மிகவும் பொல்லாததாகும். காமத்தைத் துறக்க முயற்சிப்பதைப் போன்று கோபத்தைத் துறக்கவும் முயற்சிக்க வேண்டும். சாதகனது முன்னேற்றத்துக்குக் காமம் இடையூறு விளைவிப்பது போன்று கோபமும் இடையூறு விளைவிக்கின்றதென்று கூறலாம். சாதகன் காமத்தையும் கோபத்தையும் வெல்ல முயலவேண்டும். சாந்தமான மனநிலை பெறுதற்கரியதாகும். அமைதியான மனநிலையைப் பெற்றிருப்பது அரிய பொக்கிஷமாகும். இனிய சொல் பயன்தருவது போன்று வெகுளி வாய்ப்பட்ட சொல் பயன்தராது. சுடு சொற்களை விட இனிய சொற்களுக்கு அனைவரும் கட்டுப்படுவர்; அதனை நிறைவேற்றவும் தொடங்குவர். இன்சொல் கூறுவோனது கூற்றுக்கு உலகமே செவி சாய்க்கிறது. அதனைச் செயல்படுத்தவும் முனைகிறது.

விரைந்து தொழில் கேட்கும் ஞாலம் நிரந்தினிது
சொல்லுதல் வல்லார்ப் பெறின்

என்பது பொய்யாமொழி. ஆத்ம சாதகன் யாண்டும் இன்முகத்துடன் இன்சொல்லாளனாக இருத்தல் வேண்டும். பணிவும் இன்சொல்லும் உடையவனாக இருத்தற்கேற்ற அணிகலன் வேறொன்றில்லை.

பணிவுடையன் இன்சொலன் ஆதல் ஒருவற்கு
அணியல்ல மற்றுப் பிற

என்பது பொய்யாமொழி.

ஒவ்வொரு ஊரிலும் சுடுகாடு அல்லது இடுகாடு இருக்கின்றது. அந்தச் சுடுகாடு நமக்கு எதை நினைவூட்டுகிறது? மானுட வாழ்வின் நிலையாமையை அது என்றென்றும் நமக்கு நினைவூட்டிக்கொண்டே இருக்கின்றது. எத்துணை விதமான மாந்தர்! நல்லவர்கள் கெட்டவர்கள்! இளைஞர்கள் முதியோர்கள்! ஆண்கள் பெண்கள்! அறிஞர் அறிவிலிகள்! கற்றவர் கல்லாதவர் அனைவரும் ஒருங்கு கூடுகின்ற இடம் சுடுகாடுதான். வாழ்க்கையில் ஒன்றுபடாதவர்கள் எல்லாம், ஒரு இடத்தில் கூடாதவர்களெல்லாம் இங்கே ஒன்றுபடவும், இவ்விடத்தில் கூடவும் செய்கின்றனர். நேற்று வீட்டிலிருந்தவன் இன்று காட்டிலிருக்கிறான்; இன்று வீட்டில் இருக்கும் நாம் நாளை சுடுகாட்டில் இருப்போம். சுடுகாடுதான் இந்தவுடலின் இறுதியான உறைவிடம். சாதகன் சுடுகாட்டை அடிக்கடி சிந்திக்க வேண்டும். சுடுகாட்டைப் பற்றிய சிந்தனை சிவச் சிந்தனைக்கு நிகராகும். சிவனார் ஸ்மசானவாசி என்றழைக்கப்படுகின்றான். அவருக்குரிய அற்புதக் கோயில் சுடுகாடுதான். "கோயில் சுடுகாடு" என்பது கோட்பாடு. சுடலைப் பொடிதான் சிவனாரின் மேனியை அலங்கரிக்கும் நீறு. "முடிசார்ந்த மன்னரும் முடிவில் பிடிசாம்பலாவர்" என்பதைச் சுடலைப் பொடி நமக்கு நினைவூட்டுகிறது. சுடுகாடுதான் நமது வாழ்வின் முடிவிடம்; சுடலைப் பொடிதான் நமது உடலின் மிச்சம். இதை உணர்ந்து உலகப்பற்றை ஒழித்துத் தெய்வப்பற்றை வளர்த்துச் சிவபதம் அடைய முயல்வோமாக.

---

# இயல்பு அலாதன செயேல்

(சுவாமி துருவானந்தர்)

மாளத்தீவு என்ற நாட்டை ஆண்டு வந்தவன் மகேந்திரவர்மன். அவனுக்கு ஓர் ஆண் குழந்தை பிறந்தது. அரசனுக்கு அமைச்சனாகவாய்த்தவன் துர்க்குணம் படைத்தவன். அரசனுக்குப் பிறகு அந்நாட்டைத் தான் ஆளவேண்டுமென ஆசைப் பட்டான். ஆனால் அரசனுக்குக் குழந்தை பிறந்ததால் அவன் ஆசை நிறைவேற வாய்ப்பில்லை என அறிந்தான். அரசனுக்கு ஜோதிடத்தில் மிகுந்த நம்பிக்கை இருந்தது. ஜோதிடருக்கு நிறைய பொருள் கொடுத்துத் தன் காரியம் வெற்றி பெறுவதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்தான். பிறந்த ஆண் குழந்தைக்கு ஜாதகம் கணித்தான் ஜோதிடன். அரசனைத் தனியே அழைத்து 'அரசே, உங்கள் குழந்தையின் முகத்தில் மதிபோன்ற மச்சம் இருக்கிறது. இந்த அறிகுறி உள்ள குழந்தை அரசவம்சத்தில் பிறந்தால் அரச குலம் அழிந்துபோகும். நாடு பகைவர் வசமாகும். ஆகவே நாட்டின் நலனை உத்தேசித்தும், அரசகுலம் தழைக்கவும் இக் குழந்தையை எங்கேயாவது, யாருக்கும் தெரியாமல் விட்டு விடுவது தங்களுக்கும் நலம், நாட்டிற்கும் நலம்' என ஜோதிடன் கூறினான்.

ஜோதிடத்தில் நம்பிக்கை கொண்ட அரசன் அரசியிடம் கலந்தாலோசித்துத் தன் குழந்தையையும் விலை மதிக்க முடியாத முத்துமாலையையும் ஒரு பெட்டியில் வைத்தான். யாருக்கும் தெரியாது அப்பெட்டியைக் கடலில் விட்டு விட்டு நாடு திரும்பினான். கடல் அலை அப் பெட்டியை அசைத்து அசைத்து இழுத்துக் கொண்டே சென்றது.

மறுநாள் காலை சூரிய உதயத்திற்கு முன் குசேலபுரி என்ற ஊரிலுள்ள மீனவர்கள் மீன் பிடிப்பதற்காக கட்டுமரத்துடன் கடலில் வந்து கொண்டிருந்தனர். மிதந்து வந்த பெட்டியை எடுத்துத் தங்கள் தலைவனிடம் சேர்ப்பித்தனர். குழந்தையில்லாத மீனவர் தலைவன் பெட்டியிலுள்ள குழந்தையை எடுத்து பகீரதன் என்னும் பெயர் சூட்டி வளர்த்து வந்தான். பெட்டியில் இருந்த முத்துமாலையைப் பகீரதனுக்கு அணிவித்தான். மற்ற மீனவச் சிறுவர்களுடன் பகீரதன் கல்வி பயின்று வந்தான். அறிவிலும், ஆற்றலிலும் ஒப்பு உயர்வு அற்றவனாகத் திகழ்ந்தான்.

குழந்தை ஒன்று பிறக்கிறபொழுது வெறும் காலி மனத்தோடு பிறப்பதில்லை. முன்ஜன்மங்களில் பெற்ற சம்ஸ்காரங்களைச் சுமந்து கொண்டு மானுட வடிவம் எடுத்துப் பிறக்கிறது. புறத்தோற்றத்திற்குக் குழந்தைகளாக இருந்தாலும் நாட்டை உய்வடையச் செய்யும் சான்றோனாகவோ, சமுதாயத்தைச் சீரழித்துச் சின்னாபின்னமாக்கும் துஷ்டனாகவோ உருவாவது அவனவன் பெற்ற சம்ஸ்காரத்தின் விளைவேயன்றி வேறல்ல. முன்பு எண்ணிய எண்ணத்தின் விளைவுதான் இப்போது நமக்கு வந்து அமைந்திருக்கும் பிறவி. இப்பொழுது நாம் எண்ணும் எண்ணத்தின் விளைவுதான் இனி நமக்கு அமையவிருக்கும் பிறவி. ஆகவே இனிவரும் பிறவியை நம் விருப்பத்திற்கேற்றாற் போல மாற்றியமைக்க நமக்கு இயலும். இதைத் தான் 'மனம்போல வாழ்வு' என்று சொல்லிச் சென்றனர் பெரியோர்.

அவ்வூர் எல்லையில் சித்த புருஷர் ஒருவர் இருந்தார். பகீரதன் தன் தாய் தந்தைக்குச் சிரத்தையோடு சேவை செய்து வந்தான். எஞ்சிய நேரங்களில் அந்த மகாபுருஷரிடம் தன் ஐயங்களைத் தெரிவித்தும், அவரை குருவாக ஏற்று அவருக்குப் பணிவிடை செய்தும் வந்தான். நுண்ணிய பல உண்மைகளை அவர் மூலம் அறிந்த அவன் அறிவுக்களஞ்சியமாகத் திகழ்ந்தான். அறநூல்கள் புகட்டும் அற நெறியை அங்கு வாழ்ந்து வந்த மக்களுக்கும் புகட்டி வந்தான். வயோதிகம் அடைந்த மீனவர் தலைவன் நோய்வாய்ப்பட்டான். தன் தலைமைப் பதவியில் தன் மகன் பகீரதனை அமர்த்தினான். நடுக்கடலில் சுறாமீன் ஒன்று இருந்து கொண்டு மீனவர்களுக்குப் பெரிய இடையூறு செய்து வருவதாகப் பகீரதனுக்குச் செய்திகள் வந்து கொண்டிருந்தன. சுறாமீனைப் பிடித்து வரத் தந்தையிடம் அனுமதி வேண்டினான். அருமந்த புதல்வனுக்கு அனுமதி தர மறுத்தார் தந்தை. ஆனால் அவனுடைய குருவானவர் அவனை மனமுவந்து அனுப்பும்படி

கேட்டுக் கொண்டார். முக்காலத்தையும் உணர்ந்த மூர்த்தி அவர். புறப்பட்டுச் செல்ல இருக்கும் பகீரதனிடம் இங்ஙனம் பேசினர்: 'நீ அரச குலத்தில் பிறந்து வளர்ந்து பெரிய சக்கரவர்த்தியாக வரவேண்டியவன். உனது அறிவுச் சுடர் விளக்கு குடத்துக்குள் இது காறும் வைக்கப்பட்டிருந்தது. குன்றின்மீது வைத்து உலகுக்கு ஒளி பரப்ப வேண்டிய தருணம் இனி வரப்போகிறது. சீர்கெட்டு வருகிற சமுதாயத்தைச் சிறப்படையச் செய்வது உன்போன்று தூக்கி வினை செய்யும் பேராற்றல் படைத்த அறிவாளர்களுக்கே முடியும். சென்று வா' என ஆசீர்வதித்தார்.

மறுநாள் காலை பகீரதனின் தலைமையின் கீழ் மீனவர் கூட்டம் கட்டுமரத்தோடு சுறு மீனைப் பிடிக்கச் சென்றனர். நடுக்கடலுக்குள் ஆங்காங்கு சென்று சுறுமீனைத் தேடுவதில் முனைந்தனர்.

திடீரென்று எங்கும் இருள் சூழ ஆரம்பித்தது. இடியும் மின்னலும் அச்சத்தை ஊட்டின. கடலில் ஏற்பட்ட கொந்தளிப்பால் மீனவர் நிலை தடுமாறினர். பிறிட்டெழுந்த அலைகள் மீனவர்களைக் கட்டுமரங்களிலிருந்து அப்புறப் படுத்தின. புயலில் சிக்கிய மீனவர்கள் இருவில் திசை தெரியாது நீந்தித் தத்தளித்துக் கொண்டிருந்தனர். இறைவனின் நாமத்தை ஜபித்துக்கொண்டு அஞ்சாது நீந்திக் கொண்டே இருந்தான் பகீரதன். எங்குப் போகிறோம், இனி என்ன நடக்கும் என்ற கவலையின்றி இரவு முழுவதும் நீந்திக்கொண்டிருந்தான். திடீரென பாறை ஒன்று தென்படவே அதில் ஏறி நின்ருன். ஏதோ ஓர் தீவை அடைந்து விட்டதாக எண்ணினன். மங்கிய வெளிச்சத்தில் ஒன்றும் தெரியவில்லை. இரவு முழுவதும் நீரிலேயே நீந்தியதால் பாறையில் களைத்து உறங்கி விட்டான். விடிந்து விட்டது.

பேரிகைகளும், சங்கு நாதங்களும் திடீரென்று எங்கேயோ இருந்து ஒலிக்கத்தொடங்கின. உறக்கத்தில் ஆழ்ந்திருந்த பகீரதனை இந்த ஓசை, ஒலிகள் தட்டி எழுப்பின. பட்டத்து யானை ஒன்று தன் துதிக்கையில் ஒரு பெரிய மாலையை ஏந்திக்கொண்டு கம்பீரமாக நடந்து வந்தது. அதனைத் தொடர்ந்து அரசு அதிகாரிகளும், மந்திரியும் புடை சூழ்ந்து வந்தனர். பாறையின் மீது படுத்திருந்த பகீரதனை நோக்கி பட்டத்து யானை வந்து அவன் கழுத்தில் மாலை அணிவித்தது. மரியாதைக்கு அறிகுறியாக மண்டியிட்டு வணங்கி வானம் அதிரும்படி பிளிறியது. தன் மீது ஏறி அமரும்படி சைகை செய்தது. பட்டத்து யானையால் தேர்ந்தெடுத்த புதிய இளைஞனைக்கண்டு அக்கூட்டத்திலிருந்த அனைவரும் மகிழ்ச்சியால் ஆனந்தக் கூத்தாடினர். பகீரதனைச் சுமந்துகொண்டு பட்டத்து யானை ஊரின் முக்கிய வீதிகளின் வழியாக அரண்மனை சென்றடைந்தது. யானையின் மீது உட்கார்ந்திருந்த வாலிபனை மாடியிலிருந்தவாறு உற்று நோக்கினன் மன்னன் மகேந்திரவர்மன். அவன் முகத்தில் மிளிர்ந்த பிறைச் சந்திரனைப் போன்றிருந்த கருமையான மச்சம் அரசனின் உள்ளத்தை ஈர்த்தது. கீழே இறங்கி வந்து அரண்மனை வாயிலண்டையில் நின்று, வந்த வாலிபனை இன்முகத்துடன் வரவேற்ருன். பகீரதனின் கழுத்தில் மின்னிக் கொண்டிருந்த முத்து மாலையைக் கண்டவுடன் அரசன் அடைந்த ஆனந்தத்திற்கு அளவே இல்லை. ஆனல் அதை அவன் வெளிக்காட்டாது பகீரதனை அரண்மனைக்குள் கூட்டிச் சென்ருன்.

எல்லாரும் தத்தம் இல்லங்களுக்குச் சென்றனர். அமைதி இழந்த அமைச்சன் தன் இல்லம் ஏகினன். மன்னர் இளைஞனை விசாரித்து அவன் யார்? எந்த நாட்டைச் சேர்ந்தவன்? என்பதை யெல்லாம் தெளிவாகக் கூறும்படி கேட்டார்.

பகீரதன் கூறினன்: "அரசே என்னைப் பெற்ற தாய் தந்தையர் யார் என்று எனக்குத் தெரியாது. யாரோ என்னைப் பெற்று ஒரு பெட்டியில் வைத்து இந்த முத்துமாலையையும் வைத்துக் கடலில் போட்டுவிட்டதாகக்கேள்வியுற்றேன். மீனவர்கள் என்னை எடுத்து வளர்த்தனர். எனக்குப் பகீரதன் என்னும் பெயர்சூட்டி அவர்களின் தலைவராக்கினர். என் நாட்டில் ஒரு சித்த புருஷர் இருக்கிருர். அவர் தான் எனக்கு என் கடந்த கால நிகழ்ச்சிகளை எல்லாம் கூறினர். நான் ஒரு அரசனுக்குப் பிள்ளையாகப் பிறந்தவன் என்றும், ஜோதிடன் கூறிய பொய்யுரையை நம்பிய என் தந்தை என்னைப் பெட்டியில் வைத்து கடலில் விட்டு

விட்டார் என்றும் கூறினர். ஆனல் நான் மீண்டும் என் தாய் தந்தையரை விரைவில் சந்திப்பேன் என்றும் தீயவர்களைக் களைந்தெடுத்து நலத்தை நிலைநாட்டுவேன் என்றும் அடிக்கடி கூறுவார். ஆனல்...... நடந்ததோ வேறு விதமாகப் போய்விட்டது. கடல் அலையால் தாக்கப்பட்டு எங்கேயோ வந்து சேர்ந்து இருக்கிறேன்.''

அரசன்: ''மகனே நீ எங்கும் போகவில்லை. உன் தாய் தந்தை இருக்கும் இடத்திற்கே வந்துவிட்டாய். உன்னைப் பெட்டியில் வைத்து கடலில் விட்ட பாவி நான்தான். அதோ உன் தாய் மரணப் படுக்கையில் இருக்கிருள்பார்.''

தாய் தந்தையரை வீழ்ந்து வணங்கினன். இனிமேல் தான் செய்ய வேண்டிய பெரும் பொறுப்புகளைஎண்ணிப் பார்த்தான்.அரசனும் மகனை எச்சரித்தான். ''மகனே! மந்திரியாக இருப்பவன் உன் தாய் மாமன். அவனது நடத்தையை மக்கள் வெறுக்கின்றனர். உன்னைப் பற்றிப் பொய்யான கருத்தை எனக்குச் சொல்லும்படி ஜோதிடனைத் தூண்டியதும் அவனே. அவனும் ஜோதிடனும் நாட்டை ஆள விரும்புகின்றனர். மக்களின் விருப்பத்தின் பேரில் தான் பட்டத்து யானை உன்னைத் தேர்ந்தெடுத்துள்ளது.''

பகீரதன்: ''அப்பா, நீங்கள் ஜோதிடத்தில் வைத்த அளவுக்கு மீறிய நம்பிக்கையைத் தீயவர்கள் நன்கு பயன்படுத்திக் கொண்டனர். இன்னும் ஜோதிடம் பார்ப்பதில் நம்பிக்கை உங்களுக்கு இருக்கிறதா? அல்லது மறைந்து விட்டதா?''

அரசன்; ''அது ரத்தத்தில் ஊறிப்போயிருக்கிறது அது என் உள்ளத்தைவிட்டு எவ்வாறு சுலபத்தில் மறையும்?''

பகீரதன்: ''ஜாதகம் பொய் என்பதை நிருபிக்கிறேன் பாருங்கள்!''

''யாரங்கே,உடனேஅரண்மனை ஜோதிடரை அரசர் கூப்பிட்டதாகச் சொல்லுங்கள்.''

(ஜோதிடர் வருகிருர்)

பகீரதன்: ''ஐயா, ஜோதிடரே, நீர் இதுவரை கணித்துச் சொன்ன ஜாதகமனைத்தும் நடந்துள்ளதா?''

ஜோதிடர்: ''ஆமாம். என்றும் நான் சொன்னது பொய்த்துப் போனது கிடையாது.''

பகீரதன்: ''உமக்கு ஆயுள் எப்பொழுது முடிகிறது? சரியாகக் கணக்கிட்டுச் சொல்ல முடியுமா?''

ஜோதிடர்: ''இன்னும் இருபத்திரண்டு ஆண்டுகள், ஒன்பது மாதம், நான்கு நாட்கள் பாக்கியிருக்கின்றன.''

பகீரதன்: ''நீங்கள் சொன்னது பிழைபோய் விடலாம். ஆகவே மீண்டும் சரியாகப் பார்த்துச் சொல்லுங்கள்.'

ஜோதிடர்: ''கிழக்கே உதிக்கிற சூரியன் மேற்கே உதித்தாலும் நான் சொன்னது பொய் போகாது. இது சத்தியம்.''

பகீரதன்: ''அப்பா இதோ பாருங்கள்'' என்று தன் அருகிலிருந்த வாளை உருவி ஜோதிடனின்தலையைச் சீவி எறிந்தான்.அவன் தலை தரையில் உருண்டது. ''அவன்பேசியதைக் கேட்டீர்களா? இன்னும் இருபத்திரண்டு ஆண்டுகள் வாழ்வேன் என்று கூறியவன் இப்பொழுது ரத்தவெள்ளத்தில் கிடக்கிருன்.இனிமேலாவது, ஜோதிடம், குறிபார்த்தல் முதலிய மூடநம்பிக்கைகளை உதறி எறிந்துவிட்டுப் பகுத்தறிவைப் பயன்படுத்துங்கள்.

''ஒருவார காலம் மக்களின் மத்தியில் மாறுவேடமணிந்து குறையைக் கவனித்து வருகிறேன். அப்பொழுதுதான் மந்திரியின் திட்டமும் நன்கு புலப்படும். அவரைத் திருத்துவது என் கடமை'' என்று கூறிவிட்டுப் பகீரதன் ஊரின் பல்வேறு இடங்களைப் பார்வையிட்டான். பசி வயிற்றைக் கிள்ளியது. ஊரைவிட்டுத் தனியாக ஓர் ஆஸ்ரமம் இருந்தது. அங்கு மாணவர்கள் வேதங்கள் கற்றுக் கொண்டிருந்தனர். பசியோடு சென்ற பகீரதன் வாயிலில் நின்ருன். பெருத்த வயிறு படைத்த பிராமணன் ஒருவன் 'யாரடா நீ?' என்று அதட்டும் பாங்கில் கேட்டான்.

பகீரதன்: ''ஐயா நான் கூலி வேலை செய்பவன். பசிக்கு ஏதாவது கொடுங்கள். நீங்கள் கொடுக்கிற வேலையைச் செய்கிறேன்.''

பிராமணன்: ''அடே நீ சூத்ரன! இங்கே பிராமணர்களுக்குத்தான் உணவு. நில்லாதே போய்விடு.''

பகீரதன்: ''ஐயா மக்களுக்குச் சமய ஞானத்தைப் புகட்டும் குருகுலம் நடத்துகிறீர்

கள். பசியோடு ஒருவன் வந்தால் உணவிடுவதே ஈகை என எல்லா மதங்களும் சொல்லுகின்றன. பிராமணனுக்கு மட்டும் உணவிடவேண்டும்; பிராமணனல்லாதவனுக்குச் சோறிடக் கூடாது என்று எந்த வேதத்திலாவது சொல்லப்பட்டிருக்கிறதா?''

பிராமணன்: "அடே சண்டாளா, அதிகப் பிரசங்கித்தனமாகப் பேசாதே. உன் போன்ற பாப ஆத்மாக்கள் நிழல் பட்டாலே தீட்டு. 'போய்விடு இங்கிருந்து' என்று சொல்லி விட்டு அப்பால் சென்று விட்டான்.''

பகீரதன்: "சமயத்தின் பெயரால் நடக்கின்ற தில்லுமுல்லுகள் ஏராளம். சமயத்தைச் சமயம்போல பயன்படுத்துகிற சதிகாரர்கள் இருக்கிறவரை, சமயம் தழைப்பது எங்ஙனம்? வளர்ந்து வருகிற மரத்தில், புல்லுருவிகள் புகுந்து, மரத்தைக் கெடுப்பதுபோன்று, மக்களுக்கு உயர்ந்த உண்மையைப் புகட்டி, ஒற்றுமையை வளர்த்து, மானிடப் பிறவியின் இலட்சியத்தைப் புகட்டவேண்டியவர்கள்,சமயத்தின் பெயரை வைத்து ஜாதிகளைப் பிரித்து, உயர்ந்தவன், தாழ்ந்தவன் என்ற பேத புத்தியை வளர்த்து அவனுடைய அகங்காரத்தைக் கொழுக்க வைத்து', இலட்சியத்தை மறக்கடிப்பதுதான் இவர்கள் செய்கிற செயலா?'' இயல்பு அலாதனவற்றைச் செய்வதால் அடையும் பயன்தான் என்ன?''

பெரியவர்: "யாரப்பா நீ!ஏதேதோ பெரிய பெரிய விஷயங்களைப் பேசுகிறாயே! எதற்கு இங்கு வந்தாய்? நடந்ததைச் சொல்.''

பகீரதன்: "பசிக்குச் சிறிது உணவு கேட்டேன். பிராமணர்களுக்குத் தான் இங்கு உணவு தரப்படும். மற்ற ஜாதியார்க்கு இல்லை என்கிறார்கள். ஏன் இந்தக் குறுகிய புத்தி? நீங்கள் யார்?

பெரியவர்: "நான்தான் இந்த மடத்துக்குத் தலைமைப் பதவி வகிப்பவன். நீ பேசியதை யெல்லாம் நான் கேட்டேன். என்ன செய்வது? என்னைச் சுற்றியுள்ள கூட்டங்கள் ஆட்டுவித்தபடி நான் ஆடவேண்டி உள்ளது. இல்லையென்றால் இந்தப் பட்டம்கூட எனக்கு இல்லாது போய்விடுமே. இதே வழியாகச் சென்றால் சில தெருக்கள் வரும். அங்கு உனக்கு உணவு கிடைக்கும் போ.'' பசியால் நடக்க இயலாத பகீரதன் மயங்கிக் கீழே வீழ்ந்தான். அந்த வழியே சென்ற ஒரு தோட்டி அவன்மீது இரக்கம் கொண்டான். அவனை எழுப்பித் தன் குடிசைக்கு அழைத்துச் சென்றான். தனது எளிய உணவை அவனுக்கு மனமுவந்து படைத்தான். குலத்தில் கீழ் மகனாக இருந்தாலும் அவன் பெற்றிருந்த பரந்த மனதை எண்ணிக் கண்ணீர் மல்கினான் பகீரதன்.

சிறிது தூரம் சென்றதும் முரசு ஒலிக்கும் சப்தம் கேட்டது. அன்று இரவு நடக்கும் நாடகம் பற்றிய முன் அறிவிப்புத்தான் அது. கோயிலுக்குச் சென்றுகொண்டிருந்த கூட்டமனைத்தும் கலைந்து, நாடகம் நடைபெறும் இடத்திற்கு ஓடினர். காரணம் நடிகர்கள் அங்கு தென்பட்டவுடனே தெய்வ தரிசனம் காணப்போவதுபோல் ஓடினர். பகீரதனின் மனது வேதனை அடைந்தது. பண்போடு வாழவேண்டிய மக்கள் பாழடைந்து போவதைக் கண்டு அவர்களுக்கு நெறியான வழிகாட்டும் சான்றோர்கள் இல்லாததால்தான் இத்தகைய குறைநிலை ஏற்பட்டுள்ளது என உணர்ந்தான். ஆகவே, தான் அரச பதவி வகித்தபின் பல மாற்றங்களைச் செய்ய முடியும் என்று எண்ணினான். மகேந்திரவர்மனும் பகீரதனுக்குப் பட்டம் சூட்டினான். முரட்டுத்தனமுடைய மாமனை அமைச்சனை அடக்கி வைத்தான். சமயஸ்தாபனங்களிலும், பள்ளிகளிலும் அத்வைத வேதாந்தக் கருத்துக்களை பரப்பவும், மனிதனை உய்வடையச் செய்யும் மேலாம் கருத்துக்களைக் கொண்ட நூல்களை வெளியிடவும் ஆணையிட்டான். பால் உணர்ச்சியூட்டும் நாடகங்களை நடத்தக் கூடாதென தடை விதித்தான். ஆங்காங்கு சமய மன்றங்களில் சமய சொற்பொழிவுகள் ஏராளமாக நடந்தன. மாளத்தீவு மக்கள் மனமகிழ்வோடு வாழ்ந்தனர். அவனுடைய புகழ் கடல் கடந்தும் பரவியது. அவனது குருநாதர் மீனவர்களை அழைத்து வந்து ஆசி வழங்கிச் சென்றார். அவனுடைய தெளிவான அறிவாலும், தூய அன்பாலும் கவரப்பட்டவர்கள் தீய ஒழுக்கங்களை விட்டு நல்லொழுக்க நற்செய்கைகளில்மனதைச் செலுத்தினர். 'இயல்பு அலாதன செயேல்' என்ற நல்லுரை பகீரதன் மூலமாக அமைச்சனுக்கும், மக்களுக்கும் நல்ல பாடம் கற்பித்தது.

---

# சுந்தரர் வாக்கு

(வித்துவான் ஆதி. பாலசுந்தரன்)

நல்லது எது? கெட்டது எது? என்பதை நாம் நன்ருகப் பகுத்து ஆராய்ந்து உணர வேண்டும். எப்படி உணர முடியும்? நமக்குக் கிடைத்திருக்கும் அரிய பகுத்தறிவைக் கொண்டு உணர முடியும். மக்களைத் தவிர வேறு உயிர் இனங்கள் அவ்வாறு உணர முடியுமா? முடியாது. ஏன்? அவ்வுயிர் இனங்களுக்கு அறிவு உண்டே தவிர, பகுத்தறிவு இல்லை.

பகுத்தறிவைப் பெற்றிருக்கும் மனிதன் உலகத்தில் உள்ள நல்லனவற்றையும், தீயனவற்றையும் நன்ருக ஆராய்ந்து, நன்மை தருகின்ற நல்லனவற்றை ஏற்றுக்கொள்ளவேண்டும். நல்லது தீயது இரண்டும் கலந்ததுதான் உலகம். நல்ல பண்பு, தீய பண்பு ஆகிய இரண்டு பண்புகளும் கலந்த மனிதர்களே இருக்கிருர்கள். நல்ல குணங்கள் மட்டுமே உள்ளவர்களும் இல்லை; தீய குணங்கள் மட்டுமே உள்ளவர்களும் இல்லை. நாம் விழிப்புடன் இருந்து, ஆராய்ந்து எந்தக் குணம் மிகுதியாக இருக்கிறதோ அந்தக் குணத்தைக் கொண்டு, "சரி அவர் அப்படிப் பட்டவர்" என்பதை அறிந்து கொள்ளவேண்டும்.

இவ்வாறு நமது பகுத்தறிவைச் சிந்தித்துப் பார்ப்பதற்குப் பயன்படுத்துவதுடன், மற்றென்றைப் பற்றியும் சிந்திக்கத் தூண்டவேண்டும். இந்த உலகத்தில் நிலையானது எது? ஒன்றுமே இல்லை. உலகம் நிலையானது இல்லை. உலகத்தில் தோன்றிய எல்லாமே அழியக் கூடியவை என்பது நம் முன்னேர் தெளிவாக அறிந்து கூறிய கொள்கை.

இக்கொள்கையை நம் முன்னேர் தங்களுடைய மனம்போன போக்கில் சொன்னர்களா? இல்லை. தங்களுடைய நுட்பமான சிறந்த ஆழ்ந்த அறிவின் மூலம் சிந்தித்துக் கூறினர்கள். உண்மைதானே! எந்தப் பொருளுக்குத் தோற்றம் உண்டோ அந்தப் பொருளுக்கு அழிவு உண்டு என்பது அறிவியல் உண்மை. உலகத்தில் உண்டான எல்லாப் பொருள்களும் ஒருவனல் உண்டாக்கப்பட்டவை. அவ்வாறு உண்டாக்கப்படுவதால் தோற்றத்துக்கு வருபவை. எனவே அவற்றிற்கு அழிவு உண்டு. மனித உடலும் அப்படித்தான்.

மனிதவாழ்வு நிலையானது; ஒருநாளும் அழியாமல் அப்படியே இருக்கும் என்று இதுவரையிலும் யாரும் சொல்லவில்லை. மனித வாழ்வு அழியக் கூடியதே; ஆற்றங்கரையில் இருக்கக் கூடிய மரத்திற்குத் தண்ணீர் இடைவிடாமல் கிடைக்கிறது. இருந்தாலும் அந்த மரத்திற்கும் ஒருநாள் அழிவு உண்டு. அரசனுக்குச் சமமாகச் செல்வம் பெற்று அரசபோக வாழ்வு நடத்துகின்ற வாழ்க்கைக்கும் ஒருநாள் அழிவு வரத்தான் செய்யும்.

செல்வம் இருக்கிற வரையிலும் உறவுமுறை கொண்டாடி தேடிவந்து உணவு உண்டு செல்பவர்கள் பலர் இருப்பார்கள். ஆனல், செத்த பிறகோ யார் உறவு முறை சொல்லி வருவார்கள்? ஒருவரும் வரமாட்டார்கள். இது உலகத்து இயல்பு. வீடுவரை உறவு, வீதி வரை மனைவி, காடுவரை பிள்ளை, கடைசி வரை கடவுள். இதில் ஐயம் இல்லை.

சுந்தரருடைய ஆன்மா தூய ஆன்மா. அவ்வான்மா செய்த வினைப்பயனல் இப்பிறவி அவருக்குக் கிடைத்தது. சுந்தரர் தமது பிறவியின் தன்மையைத் தெளிவாக உணர்ந்தவர். மானிடப் பிறவியின் குறிக்கோள் இறைவனை எப்போதும் சிந்தித்து அவன் திருப்பாதங்களை அடைதலேயாகும் என்பதை அறிந்தவர். தலங்கள் தோறும் சென்று வழிபாடு செய்துவரும் சுந்தரர் திரு எதிர்கொள்பாடி என்ற தலத்துக்கு எழுந்தருளி எம்பெருமானை நினைத்துப் பாடுகின்ருர்.

"மத்தயானை ஏறி மன்னர் சூழ வருவீர்காள்
செத்த போதில் ஆரும் இல்லை சிந்தையுள்
வைமின்கள்
வைத்த உள்ளம் மாற்ற வேண்டா வம்மின்
மனத்தீரே
அத்தர் கோயில் எதிர்கொள்பாடி என்பது
அடைவோமே."

— அரசர்கள் பலர் சூழ்ந்து வர யானை மீது ஏறி ஊர்வலம் வரும்படியான பெருமதிப்பு உடையவர்களே! நீங்கள் சாகின்ற சமயத்தில்

உங்களுக்கு உற்ற துணையாக வருகின்றவர்கள் ஒருவரும் இல்லை. இதை நினைவில் வைத்துக்கொள்ளுங்கள். இறைவன்மீது வைத்திருக்கின்ற பக்தி உள்ளத்தை மாற்றவேண்டாம். திரு எதிர்கொள்பாடி இறைவனைப் பாடி அவனிடத்தில் அடைக்கலம் புகுவோம் என்கிறார் சுந்தரர்.

சாவு என்பது இயற்கை. எல்லா உயிர்களுக்கும் பொதுவானது. சாவுக்குப் பயப்படாதவர்கள் உலகத்தில் யார் இருக்கிறார்கள்? ஒருவரும் இல்லை. சாவுக்குப் பயப்படக்கூடாது எனச் சொல்கிறோமே தவிர, பயப்படாதவர்கள் யாரும் இல்லை. பயப்படக்கூடியவர்கள் என்ன செய்வார்கள்? பயம் இல்லாமல் இருக்க யாரையாவது துணைக்குச் சேர்த்துக் கொள்ளுவார்கள். சாவுக்கு யாரைத் துணை சேர்த்துக் கொள்ளுவது? யார் துணைக்கு வருவார்கள்? சாவுக்குத் துணை உலகத்தில் ஒருவரும் இல்லையே என்று மனம் கலங்குகிறது. செத்த பிறகு நம் கதி என்னவாகும் என்று மனம் தவிக்கிறது. சுந்தரர் சரியான சமயத்தில் அந்தப் பயத்தைப் போக்குகிறார்.

இறந்து விடுவோமே! என்று யாரும் பயப்படவேண்டிய அவசியம் இல்லை. ஆன்மாவுக்குத் தான் அழிவே கிடையாதே! The life of the man starts only after his physical death — மனிதவாழ்வு, அவனுடைய பௌதிக உடம்பு அழிவுக்குப் பிறகுதான் தொடங்குகிறது என்கிறார் கார்ல் மார்க்ஸ். (Biography of Carl Marx.) ''மரணம் இலாப் பெருவாழ்வு வாழ்ந்திடலாம் கண்டீர்'' என்கிறார் இராமலிங்க சுவாமிகள்.

செத்த பிறகு துணை ஒருவரும் இல்லையே என்று உள்ளம் கலங்க வேண்டாம். சிவபெருமான், எம்பெருமான் உற்ற துணையாக இருக்கிறான். அவன்மீது உள்ள வைராக்கியத்தை விட்டுவிட வேண்டாம் என்கிறார். மன உறுதியோடு, நம்பிக்கையோடு வாருங்கள்; உங்களுக்கு நற்கதி கிடைக்கும் என்கிறார் சுந்தரர்.

உண்மைதான்; கவலை நிறைந்திருக்கும் மனித உள்ளத்தைக் கவலையே இல்லாத கடவுள் தானே, கவலை இல்லாததாக ஆக்க முடியும். கடவுள் இருக்கிறார்; உங்களுக்குக் கவலை வேண்டாம் என்கிறார் சுந்தரர். தமக்கு மட்டும் பயம் நீங்கினால் போதும்; தமக்கு மட்டும் இறைவன் அருள்பாலித்தால் போதும் என்று சுந்தரர் எண்ணவில்லை. அத்தகைய குறுகிய மனம் அடியார்களிடத்தில் ஒரு போதும் இருந்ததில்லை.

''லோகா ஸமஸ்தா ஸுகினோ பவந்து'' என்று சம்ஸ்கிருத சுலோகம் உள்ளது. உலகத்தில் உள்ள எல்லா உயிர்களும் இன்பமாக வாழவேண்டும் என்பது இதன் பொருள். ''எல்லோரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே அல்லாமல் வேறு ஒன்று அறியேன் பராபரமே'' என்கிறார் தாயுமானவ சுவாமிகள். எல்லா மக்களுடைய இன்பங்களையும் தங்களுடைய இன்பமாகக் கருதியவர்கள் அடியார்கள். ஆகவே, இவ்வாறு பெருநோக்கோடு கூறினார் சுந்தரர்.

''செத்த போதில் ஆரும் இல்லை'' துணை ஒருவரும் இல்லைதான். ஆனால் இறைவன் இருக்கிறான். சாவு என்றால் என்ன? உயிர் எந்த உடம்பில் இருக்கிறதோ அந்த உடம்பில் இருந்து உயிர் பிரிவது சாவு. உயிராகிய ஆன்மாவுக்கு ஒரு நாளும் அழிவே இல்லை. ஓர் உடம்பில் இருந்து மற்றோர் உடம்புக்கு ஆன்மா செல்லும். ஆன்மா தானே செல்லுமா? தானே செல்லாது. தானே வேறு ஓர் உடம்புக்குச் செல்லக்கூடிய ஆற்றல் ஆன்மாவுக்கு இல்லை. அவ்வாறு இருக்குமானால், எல்லா உயிர்களும் தங்கள் விருப்பப்படியே உடம்பை எடுத்துக் கொள்ளலாமே! எல்லா உயிர்களும் மனிதப் பிறவியை அல்லவா விரும்பும்! எந்த உயிராவது பறவையாகவோ விலங்காகவோ ஏனைய சிறிய உயிர்களாகவோ பிறக்க நினைக்குமா?

ஆகவே, தனது விருப்பப்படி பிறக்கக்கூடிய, உடம்பு எடுக்கக்கூடிய ஆற்றல் ஆன்மாவுக்கு இல்லை என்பது தெரிகிறது. உயிர்கள் செய்கின்ற நல்வினை தீவினைகளுக்கு ஏற்றபடி, அந்த உயிர்களுக்கு ஏற்ற உடம்பைக் கொடுப்பவன் இறைவன்.

உயிர்களுக்கு நல்ல உடம்பு கிடைக்கவேண்டும். ஊமையாகவோ, குருடாகவோ, செவிடாகவோ இருக்கும் உடம்பை ஏற்றுக்கொள்ள யாரும் விரும்புவது இல்லை. குறைகளை உடைய உடம்பைக் கொண்ட பலரை இன்று நாம் பார்க்கிறோம். இயற்கையாக அமைந்த அந்தக்

குறைகளை மாற்ற முடியாமல் துன்பப்படுகிற வர்களைக் கண்டு நாமும் வருந்துகிறோம். எனவே, ஓர் உயிருக்குக் குறை இல்லாத உடம்பு கிடைக்குமாறு செய்பவன் இறைவனே. இதை வைத்துத்தான் சுந்தரர், “செத்த போதில் ஆரும் இல்லை” என்கிறார்.

உயிர் உடம்பை விட்டுப் பிரிந்தால் இறைவன் துணை செய்வதற்கு இருக்கிறான் என்று சுந்தரர் சொல்வதைப் பார்த்தோம். “வம்மின் மனத்தீரே! வைத்த உள்ளம் மாற்ற வேண்டா. சிந்தையுள் வைம்மின்கள்” — சிந்தித்துப் பார்த்துச் செயற்படும் அறிவு உடைய மனத்தை உடைய மனிதர்களே! எல்லாரும் வாருங்கள். இறைவன்மீது வைத்துள்ள பற்று உள்ளத்தை நீங்கள் ஒருபோதும் மாற்ற வேண்டாம் எனவும் சுந்தரர் இயம்புகின்றார்.

சாவுக்குப் பயப்பட வேண்டாம்; இறப்புக்குப் பிறகு ஆன்மாவுக்கு எம்பெருமான் துணை உண்டு. அந்தத் துணை உங்களுக்கு வேண்டுமா? அப்படி வேண்டுமானால், மனித உடம்பு எடுத்திருக்கும் இந்தப் பிறவியிலேயே இறைவனை வழிபாடு செய்யுங்கள் என்கிறார் சுந்தரர்.

இவருடைய வாக்குக்கு ஆதரவாகச் சிவவாக்கியர் பாடல் ஒன்றும் இந்தச் சந்தர்ப்பத்தில் நினைவு கூறத் தக்கது.

“கறந்தபால் முலைபுகா கடைந்த வெண்ணெய் மோர் புகாது
உடைந்த சங்கின் ஓசையும் உயிர்களும் உடல் புகா
வடிந்த வேர் அடியினின்று உதிர்ந்த பூ மரம் புகாது
இறந்து போன மானிடர் இனிப் பிறப்பது இல்லையே.”

—பசு மடுவில்இருந்து கறந்துவிட்ட பாலைத் திரும்பவும் மடுவுக்குள் செலுத்த முடியுமா? முடியாது. வெண்ணெயைக் கடைந்து எடுத்து விட்டபிறகு, திரும்பவும் மோருக்குள் இணைக்க முடியுமா? முடியாது. சங்கில் இருந்து வெளி வந்த ஓசையைத் திரும்பவும் சங்கிற்குள்ளே செலுத்த முடியாது. உடலைவிட்டு உயிர் பிரிந்த பிறகு திரும்பவும் அந்த உடம்புக்குள்ளே மனித ஆன்மா புகுந்து மானிடராகப் பிறப்பது இல்லை என்கிறார் சிவவாக்யர்.

பாலுக்கும் மடுவுக்கும், வெண்ணெய்க்கும் மோருக்கும், சங்கிற்கும் ஓசைக்கும் அவை அவை வெளி வந்தபிறகு, அவை அவை இருந்த இடத்திற்கும் அவற்றிற்கும் இருந்த தொடர்பு அறுபட்டுப் போகிறது. அதுபோல, மானிட ஆன்மா, உடம்பைவிட்டு வெளியேறிய பிறகு அந்த ஆன்மாவுக்கும் உடம்புக்கும் உள்ள தொடர்பு அறவே விட்டுப் போய்விடுகிறது. தெரிந்த பல உவமானங்களைக் கொண்டு சிவவாக்கியர் தெள்ளத் தெளிவாக விளக்கியிருக்கிறார். ஆன்மா திரும்பவும் அந்த உடம்புக்குள்ளே புகாதே தவிர, அந்த ஆன்மா செய்த நல்வினை தீவினைகளுக்கு ஏற்றவாறு வெவ்வேறு உடம்புகளைப் பெற்று மீண்டும் பிறக்கும்.

அப்படிப் பிறக்காமல், ஆன்மா முக்தி அடைவதற்கும், ஒருவேளை பிறப்பதற்கு உரிய வினை இருந்து பிறந்தால் துன்பம் அனுபவியாமல் இருப்பதற்கும் சுந்தரர் வழி கூறுகின்றார். அது என்ன வழி? இறைவன் திருவடிகளை உண்மையான பக்தியுடன் போற்றுதலேயாம்.

“நீற்றைப் புனைந்தென்ன? நீராடப் போயென்ன? நீ மனமே
மாற்றிப் பிறக்க வகை அறிந்தாய் இல்லை மாமறை நூல்
ஏற்றிக் கிடக்கும் எழுகோடி மந்திரம் என்ன கண்டாய்
ஆற்றில் கிடந்தும் துறைஅறியாமல் அலைகின்றாயே!”

என்பது பட்டினத்தடிகளார் பாடல். திருநீற்றைப் பூசி என்ன பயன்? புண்ணிய நதிகளிலே நீராடி என்ன பயன்? வேத நூல்களையும், மந்திரங்களையும் இடைவிடாமல் சொல்லி என்ன பயன்? உண்மையான கடவுள் பக்தி உன்னிடத்தில் இல்லையே மனமே! நடு ஆற்றில் கிடந்து சிக்கித் தவித்தும் கரையேறும் வழி தெரியவில்லையே! பிறவி ஆற்றில் சிக்கித் தவிக்கும் உனக்கு மோட்சம் ஆகிய கரை சேரும் மார்க்கம் அறியாமல் இருக்கிறாயே என்கிறார் சுவாமிகள். உண்மையான பக்தியும் வழிபாடும் இருந்தால் இறைவன் அருள் செய்வான் என்று உறுதியாக நம்பலாம்.

நிலம், தீ, நீர், காற்று, ஆகாயம் என்ற பஞ்ச பூதங்களால் ஆனது உலகம். “நிலம், தீ, நீர், வளி, விசும்போடு ஐந்தின் கலந்த மயக்கம்

உலகம் '' என்கிறார் ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்த தொல்காப்பியனார். அண்டத்தில் உள்ளது பிண்டத்தில் உண்டு என்று சொல்லுவார்கள். மனித உடம்பு பஞ்ச பூதங்களால் ஆனது. உடம்பில் உள்ள காரை, எலும்பு, கால்ஷியம் சத்து, மண்—நிலம். வெப்ப சக்தி தீ. இரத்தம், உமிழ்நீர் முதலியன நீர். சுவாசிப்பது காற்று. குடல்களுக்கும், மற்ற உறுப்புகளுக்கும் இடையே உள்ள வெற்றுப் பாகம் ஆகாயம். ஆகாயம் என்பது வெற்றிடம்.

இவற்றையெல்லாம் நம் முன்னோர்கள் நன்கு அறிந்து வகைப்படுத்தி விளக்கிக் கூறியிருப்பது மகிழ்ச்சியாக இருக்கிறது. நம்மைப் பெருமைப்பட வைக்கிறது. இவற்றை அடிப்படையாகக் கொண்டு பஞ்ச பூத ஸ்தலங்கள் நம் முன்னோரால் அமைக்கப்பட்டுள்ளன. பஞ்சபூத ஸ்தலங்கள் காஞ்சிபுரம், திருவண்ணாமலை, திருவானைக்கா, காளஹஸ்தி, சிதம்பரம் ஆகியவை ஆகும்.

காஞ்சிபுரம் பிருதிவிஸ்தலம். (பிருதிவி-நிலம், மண்) எல்லாக் கோயில்களிலும் சிவலிங்கம் உண்டு. அச்சிவலிங்கங்கள் எல்லாம் கல்லால் வடிக்கப்பட்டவை. காஞ்சிபுரக்கோவிலிலும் கல்லால் வடிக்கப்பட்ட சிவலிங்கம் உண்டு. ஆனால், மூலஸ்தானத்திலே உள்ள சிவலிங்கம் மண்ணால் ஆனது. ஆகவே அபிஷேகம் செய்ய மாட்டார்கள். அலங்காரம் மட்டுமே உண்டு. மண் புற்றாக இருந்து அமைந்த சிவலிங்கம். எனவே சுவாமியைப் புற்றிடங்கொண்டார் எனத் தமிழிலும், வன்மிக நாதர் என்று வடமொழியிலும் கூறுவார்கள். இக்கோவிலில் உள்ள லிங்கம் பிருதிவி லிங்கம்.

தீ வடிவில் உள்ள லிங்கம் தேயு லிங்கம். தேயு—தேஜஸ்—ஒளி. தேயு ஸ்தலம் திருவண்ணாமலை. இங்கே சிவலிங்கம் தேஜோ மயமாக அதாவது ஒளி மயமாக அமைந்துள்ளது. நீர் சூழ்ந்த லிங்கம் அமைந்துள்ள ஸ்தலம் திருவானைக்கா. இங்கே உள்ள சிவலிங்கம் அப்பு லிங்கம். இத்தலம் அப்புஸ்தலம். வாயு மயமாக உள்ள லிங்கம் இருக்கும் ஸ்தலம் காளஹஸ்தி என்ற திருக்காளத்தி. ஆகாய மயமாக இருக்கும் லிங்கம் அமைந்திருக்கும் தலம் சிதம்பரம். ஆகாயம்-வெட்டவெளி. அருவ வடிவ (உருவம் இல்லாத வடிவம்) லிங்கம் அமைந்துள்ள தலமும் சிதம்பரந்தான். இவ்வாறு பஞ்ச பூத ஸ்தலங்களை நம் முன்னோர்கள் அமைத்தனர்.

மனுநீதிச் சோழன் நீதி நெறி தவறாமல் அரசாட்சி செய்த நகரம் திருவாரூர். இந்தத் திருவாரூர் தலத்துக்கு வருகின்றார் சுந்தரர். திருவாரூரில் எழுந்தருளியிருக்கும் இறைவனைப் போற்றுகிறார்.

''அறுபதும் பத்தும் எட்டும் ஆறினோடு அஞ்சும் நான்கும்
துறுபறித்து அனைய நோக்கிச் சொல்லிற்று ஒன்றுகச் சொல்லார்
நறுமலர்ப் பூவும் நீரும் நாள்தோறும் வணங்குவார்க்கு
அறிவினை கொடுக்கும் ஆரூர் அப்பனே அஞ்சினேனே.''

---

# செய்திகள்

**நிகழ்பவை**

நவம்பர் மாதம் 17 ஆம் தேதி வியாழக்கிழமையன்று ஸ்ரீ விவேகானந்த வித்யாவனக் குருகுலப்பள்ளி தீபாவளி விடுமுறைக்குப்பின் திறக்கப்படுகிறது.

நவம்பர் மாதம் 26 ஆம் தேதி சனிக்கிழமையன்று மேச்சேரி சன்மார்க்க சங்க ஆண்டு விழாவுக்கு ஸ்ரீமத் நித்தியானந்த சுவாமிகள் தலைமை தாங்கி சொற்பொழிவு ஆற்றுவார்கள்.

டிசம்பர் மாதம் 5 ஆம் தேதி திங்கட்கிழமையன்று அவலூர்பேட்டை அரசினர் உயர்நிலைப் பள்ளி மாணவ மாணவியர்களுக்கு அந்தர் யோக முறையில் ஸ்ரீமத் நித்தியானந்த சுவாமிகள் அறவுரை நிகழ்த்துவார்கள்.

டிசம்பர் மாதம் 9 ஆம் தேதி வெள்ளிக்கிழமையன்று ராசிபுரத்தில் வள்ளலார் பணி மன்றத்தார் நடத்தும் சத்திய ஞானசபை கும்பாபிஷேக விழாவில் ஸ்ரீமத் நித்தியானந்த சுவாமிகள் கலந்துகொள்வார்கள்.

---

# ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்
## இயற்றிய நூல்கள்

- திருவாசகம்-மூன்றாம் பதிப்பு பிரசார விலை ரூ. 14-00
- ஸ்ரீமத் பகவத்கீதை-பதினொன்றாம் பதிப்பு பிரசார விலை ... 12-00
- ஞானயோக விளக்கம் ... 8-00
- ராஜயோக விளக்கம் ... 8-00
- கர்மயோக விளக்கம் ... 7-00
- பக்தியோக விளக்கம் ... 6-00
- பரமஹம்சரின் பெருமை ... 6-00
- விவேகானந்த விவரணம் ... 4-00
- ஸ்ரீ விவேகானந்தர் ஜீவிதம் ... 4-00
- விவேகானந்த உபநிஷதம் ... 4-00
- கடவுளின் வடிவங்கள் ... 4-00
- சந்தேகம் தெளிதல் பாகம்-I ... 3-50
- சந்தேகம் தெளிதல் பாகம்-II ... 3-50
- ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேச மஞ்ஜரீ ஆறாம் பதிப்பு-பிரசார விலை ... 2-75
- தினசரி தியானம்-பதினான்காம் பதிப்பு (பிளாஸ்டிக் உறையுடன்) பிரசாரவிலை ... 2-75
- ஸ்ரீ ராமகிருஷ்ணர் சரிதம் ... 2-00
- தேவரகசியம் (முதலிய கதைகள்) ... 2-00
- ஸ்ரீ சாரதா தேவியாரது சரிதம் ... 2-00
- கண்ணன் என்னும் கடவுள் ... 2-00
- தாயுமானவர் இயற்றிய
  - பரிபூரணானந்தம் விரிவுரை ... 3-00
  - கருணாகரக்கடவுள் ௸ ... 2-00
  - மௌனகுரு வணக்கம் ௸ ... 1-50
  - பரசிவ வணக்கம் ௸ ... 0-50
- விரதவீரர் பீஷ்மர் (நாடகம்) ... 1-50
- சந்நியாசி ... 1-25
- பஜனைப் பாடல்கள் ... 1-25
- குழந்தைகளின் களிக்கூடம் ... 1-00
- இராவண தத்துவம் ... 1-00
- சகோதரி நிவேதிதை ... 1-00
- ஹரிச்சந்திரன் (நாடகம்) ... 1-00
- காயத்ரீ ... 1-00
- வாலிமோக்ஷம் (நாடகம்) ... 1-00
- தவப்புதல்வர்கள் (நாடகம்) ... 1-00
- அறம் வளர்த்த நம்பி ... 0-95
- நோய்க்கு இடம் கொடேல் ... 0-80
- நன்மக்களைப் பெறுதல் ... 0-80
- தானவீரன் கர்ணன் (நாடகம்) ... 0-80
- பாண்டவ கௌரவ பெருமை (நாடகம்) ரூ. 0-80
- பாதுகா பட்டாபிஷேகம் (நாடகம்) ... 0-75
- இறை வணக்கம் ... 0-75
- *ஆத்ம சக்தி ... 0-75
- செத்தவர்கள் நம்மோடு பேசுகிறார்களா? ... 0-75
- *மனிதனது நிஜசொரூபம் ... 0-70
- *சக்தி தத்துவம் ... 0-70
- *சிவ தத்துவம் ... 0-70
- பிரஹ்லாதன் (நாடகம்) ... 0-65
- பார்வதி,லக்ஷ்மி,சரஸ்வதி கர்வபங்கம் ... 0-65
- *ஈசன் எங்கும் நிறைந்துள்ளான் ... 0-60
- இந்து மதமும் கிறிஸ்துவ மதமும் ... 0-60
- *ஆலய வழிபாடு ... 0-60
- ஸ்ரீ ராமகிருஷ்ணாஷ்டோத்தர சத நாமாவளி: ... 0-50
- சைவன் யார்? ... 0-50
- *சூரிய நாராயணன் ... 0-50
- *முருகக் கடவுள் ... 0-50
- *விஷ்ணு தத்துவம் ... 0-50
- தெய்வீக மகிமைகள் ... 0-50
- கர்மகாண்டம் எது? ஞானகாண்டம் எது? ... 0-50
- மார்க்கண்டேயன் (நாடகம்) ... 0-40
- தபோபலன் (நாடகம்) ... 0-40
- *கணபதி ... 0-40
- அருள் விருந்து 1 to 25 ஒவ்வொன்றும் ... 0-30
- பரசுராமர் கர்வ பங்கம் (நாடகம்) ... 0-15
- The Bhagavad Gita (8th Imp.) ... 15-00
- The Indian National Education ... 8-00
- Sri Lalithambika Sahasranama Stotram ... 8-00
- Ramakrishna Lives Vedanta ... 8-00
- Facets of Brahman or The Hindu Gods ... 5-00
- Daily Divine Digest (with plastic-cover) ... 4-50
- Mahabharata (with plastic cover) ... 4-50
- Ramayana (do) ... 4-00
- The Man Making Message of Vivekananda (with plastic cover) ... 3-00
- The Bhagavad Gita (Small Size) (With plastic cover) ... 3-00
- Sri Vishnu Sahasranama Stotram ... 2-50
- Holy Bible—In the Light of Vedanta ... 1-50
- *Introducing the Gita ... 1-50
- *Key to Higher Life ... 0-75
- *The Teacher ... 0-60
- *The Student ... 0-45

தேவையான புத்தகங்களுக்கு உரிய விலையுடன் தபால் கட்டணத்திற்காக ஸ்ரீமத் பகவத்கீதைக்கு ரூ. 3-00ம் மஞ்ஜரீக்கு ரூ. 2-40ம் தினசரி தியானத்திற்கு ரூ. 2-20ம் மற்ற வெளியீடுகளுக்கு ரூ. 2-50 முதல் 3-50 வரை சேர்த்து அனுப்புங்கள்.

*இக்குறியிட்ட புத்தகங்கள் ஏனைய பெரிய புத்தகங்களில் அடங்கியுள்ளன.

ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம், திருப்பராய்த்துறை-639 115. திருச்சி Dt

இரண்டாம் பதிப்பு வெளிவந்துள்ளது

விவேகானந்த சுவாமிகள் இயற்றிய

# கர்மயோக விளக்கம்

விளக்கியவர் ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர்



ஜீவனும், ஜகத்தும் கர்ம சொருபம். கர்மம் ஜீவனைப் பந்தப்படுத்துகிறது. ஆனால் வினை வாழ்வை வகைப்படுத்துகிறது; அவனவன் நிலையில் அவனவன் பெரியவனே; வினையாற்றும் விதம்; கடமை என்பது யாது? உலகுக்கு உதவி செய்வது நமக்கு உதவியாகிறது; பற்று ஒழியுமளவு ஜீவபோதம் ஒழிகிறது; முக்தி; கர்மயோகத்தின் குறிக்கோள் ஆகிய எட்டு தலைப்புகளில் கர்மத்தின் மூலம் பாரமார்த்திகப் பெருநிலையை அடைகிற வழியை இந்நூல் காட்டித்தருகிறது.

கிரௌன் சைஸ் பக்கங்கள் 400 விலை ரூ. 7-00

(தபால் செலவு ரூ. 2-50)

Edited by SWAMI NITHYANANDA,
Printed & Published by Swami Yogananda at Tapovanam Printing School, Tirupparaitturai, Tiruchi Dt.